Registered No. M. 3536.

தனிப்பிரதி விலை { உள்நாடு அணா 1 / பர்மா, சிலோன் ,, 1¼ }

# நவசக்தி

"NAVASAKTI"

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 4 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 | 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 6 0
சில்லறை விளம்பரம் 1 அங்.0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு கரு தாதுஹூ ஆவணிமீ" உ௦உ (4—9—1936) வெள்ளிக்கிழமை பரல் கசு

## திருமால் அருள் வேட்டல்

### 2. திருவரங்கம்

எங்கிருந்தேன் இங்குவந்தேன் எப்படியென் றுய்ந்தேன்
இவ்வுடலும் இவ்வுலகும் எவ்வழியென் றோர்ந்தேன்
சங்கைதெளி யாதயர்ந்தேன் சாத்திரங்கள் பார்த்தேன்
சாதனங்கள் செய்துழன்றேன் சற்றுமொளிர் வில்லை
பொங்கிவழி காவிரியில் புகுந்துகுடைந் தெழுந்தேன்
பூவிரிந்த பொழிற்பசுமை புலன்கவர ஆழி
சங்குடையாய் நின்னருளால் சார்ந்தகதை தெளிந்தேன்
சந்நிதியில் வந்தடைந்தேன் தமிழரங்க மணியே. (1)

இருண்மயமாய்க் கிடந்தவெனக் கிவ்வுடலந் தந்தாய்
இவ்வுலக வாழ்வினிலே இனிமைபெறச் செய்தாய்
அருண்மறந்தேன் அகந்தையினுல் ஆற்றிவிட்டேன் பிழைகள்
அத்தனையும் பொறுத்தருளும் ஆண்டவன்நீ யென்றே
மருண்மனத்தன் வந்தடைந்தேன் மலர்மருவு மார்பா
மாயவனே அறிதுயிலில் மாதவனே உறங்கும் [ல்லாம்
பொருண்மையெனக் கருள்புரிந்தால் பொன்றும்வினை யெ
போதாந்தச் செல்வர்தொழும் பொன்னரங்கப் பொருளே. (2)

புற்செடியே மீன்புழுவே புள்விலங்கே முதலாம்
புன்னுடலந் தந்துதந்து புங்கவநின் னுணர்வுக்
கற்பமைந்த கரணம்விரி கனகவுடல் தந்தாய்
கருணைநினைந் தொழுகுமனங் கருணைசெய விலையே
அற்[illegible]றிலிருந்தேன் அ[illegible]க் கெடுத்தேன்
அறியாமைச் செயல்நினைக்கும் அறிவுபெற்றே னின்றே
பொற்பொளிசெய் அடியணைந்தேன் புரிந்தபிழை அப்பா
பொறுத்தருளாய் புண்ணியனே புகழரங்கப் பொலிவே.

பொன்வேண்டேன் பொருள்வேண்டேன் பூவுலகும் வேண்டேன்
புகழ்வேண்டேன் நூல்வேண்டேன் புலமையெலாம் வேண்டேன்
மன்வேண்டேன் வான்வேண்டேன் வாழ்வுமகிழ் வேண்டேன்
மழைமுகிலே நீன்மலையே வானதியே ஏழை
என்வேண்டி வந்தனனே எழின்மருவு மார்பா
எங்குமுள இறையோனே எண்ணமறி யாயோ
சொன்மேவு கவிகடந்து துயிலுகின்ற இன்பஞ்
சுரக்கவெனக் கருளாயோ தொல்லரங்கக் குருவே. (4)

பாற்கடலில் பாம்பணையில் பள்ளியுணர் வென்றோ
பரநாத விந்துநிலை பார்த்துநிற்ப தென்றோ
மேற்கருமை இருளெல்லாங் கீழ்ச்சாய்த லென்றோ
மென்மேலும் பொங்கமிழ்தம் மேவுவது மென்றோ
காற்கடிமை ஏழையுயிர்க் கண்பெறுவ தென்றோ
கல்லாத கல்வியெலாங் கற்றறிவ தென்றோ
மாற்குலமா யுலகமெலாம் மன்னுவது மென்றோ
மாயையறத் தெளிவருள்வாய் மனத்தரங்க வமுதே. (5)

(தொடரும்) —திரு. வி. க.

# அரிய தமிழ் நூல்கள்

| புராணங்கள் | ரூ. அ. |
|---|---|
| திருப்பேரூர்ப் புராணம் | 2 0 |
| ,, வசனம் | 0 8 |
| திருப்பரங்கிரிப் புராணம் மூலமும் உரையும் | 1 4 |
| குற்றாலத் தலபுராண வசனம் | 2 8 |
| ஸ்ரீ கருடபுராண வசனம் | 0 12 |
| இராமலிங்க சுவாமிகள் சரித மூலம் | 0 8 |
| திருவானைக்கா புராணம் | 0 8 |
| காரைக்காலம்மையார் சரிதம் | 0 1 |
| வாயுசங்கிதை | 0 12 |
| ஷண்முக விஜயம் | 0 12 |
| **சமய நூல்கள்** | |
| சமய தீக்ஷிதர் அநுட்டான விதி | 0 2 |
| திலோத்தக தர்ப்பண விதி | 0 1 |
| சைவ நித்யாநுஷ்டானம் | 0 6 |
| திருச்செந்தூர்ப் பிரபந்தத்திரட்டு | 1 8 |
| வேதாந்த சித்தாந்த விளக்கம் | 0 2 |
| விபூதி ருத்ராக்ஷ மஹத்வ விளக்கம் | 0 3 |
| ஸ்ரீபஞ்சாக்ஷர அஷ்டாக்ஷர மந்த்ரார்த்த ஸங்கிரஹ விளக்கம் | 0 10 |
| திருவாசகம் குறிப்புரையும் விஷய வசனமும் | 1 8 |
| ஓங்கார விளக்கம் | 2 4 |
| கம்பராமாயண வசனம் முதல்பாகம் இரண்டாம் பாகம் | 7 0 |
| சிஷ்ய ஞானதீபம் | 0 5 |
| மயூரகிரிக் கலம்பகம் | 0 4 |
| பிரம்மஞான பரம ரகசியம் | 1 0 |
| ஜீவகாருண்ய ஒழுக்கம் | 0 4 |
| சிவாலய பூஜை விளக்கம் | 0 1 |
| குருநாதன் அருள்வாழ்வு | 0 1 |
| சாதன சதுட்டயம் கலிகோ | 3 8 |
| ,, ராப்பர் பைண்டு | 3 0 |
| இப்போதே | 0 1 |
| எனது குருநாதர் | 0 8 |
| எதிரொலிகள் | 0 8 |
| அத்வைத சம்பாஷணைகள் | 0 8 |
| ஸ்வாமிவிவேகானந்தர் இராமாயண ரகசியம் | 0 8 |
| இந்துமதவினுவிடை | 0 3 |
| நித்தியகர்ம விளக்கம் | 0 6 |
| ஏன்புலால் மறுத்தல் வேண்டும்? | 0 6 |
| Superiority of Vegetarian Diet (English) | 0 8 |
| மோக்ஷ மார்க்கம் | 0 10 |
| யோகரகஸ்யம் | 0 6 |
| ஞானக்களஞ்சியம் | 3 0 |
| **தோத்திரங்கள்** | |
| திராவிட வேதத் திரட்டு | 3 8 |
| சுப்பிரமணியர் சடாக்ஷர விஞ்சை | 0 4 |
| வராகி மாலை | 0 4 |
| கந்தரநுபூதி மூலமும் பூஜா விதியும் யந்திர உரையுடன் | 0 5 |
| பார்வதிதேவியார் பனுவல்திரட்டு | 0 2 |
| பன்னிரு திருமுறைத் திரட்டும் திருப்புகழும் | 1 8 |
| கந்தர் கலிவெண்பா மூலமும் உரையும் | 0 8 |
| கந்தரந்தாதி மூலமும் உரையும் | 0 12 |
| சிவார்ச்சனைத் திருமந்திரம் | 0 1½ |
| தேசிவிநாயகர் பன்மணிமாலை | 0 1 |
| ஸ்ரீ சுப்பிரமணிய பூஜாக்கிரமம் | 1 0 |
| அப்பர் புகழ்மாலை | 0 2 |
| சுந்தரர் புகழ்மாலை | 0 3 |
| கூற்றுமலைத் தனிப்பாடற்றிரட்டு | 1 8 |
| அறநூல் | 0 10 |
| வமல ராமாயண வசனம் | 2 2 |
| தேவி மகாத்மியம் | 0 8 |
| தேவி உபநிஷத் தீபிகை | 0 4 |
| ஸ்ரீ பாலராமாயணம் | 0 8 |
| ஸ்ரீ பால பாரதம் | 0 8 |
| விசாரசன்மர் | 0 3 |
| இராமாயண சாரம் | 1 0 |
| **நீதி நூல்கள்** | |
| சன்மார்க்கசகாயம் அல்லது நீதிதர்மம் | 0 1 |
| ஸ்திரீதனம் (ஹிந்துக்களில் வழங்கும் ஸ்திரிதன சட்டம்) | 0 8 |
| **ஆராய்ச்சி நூல்கள்** | |
| சமூக விளக்கம் | 0 6 |
| கீதை காட்டும் பாதை | 0 10 |
| இராமலிங்க அடிகள் வரலாறும் திருவருட்பா ஆராய்ச்சியும் | 0 9 |
| திருநாவுக்கரசர் | 0 12 |
| பழந்தமிழ்ப் பெருமக்கள் வரலாறு | 0 2 |
| தமிழ்நாட்டு நவமணிகள் | 0 8 |

| ஜோதிட நூல்கள் | ரூ. அ. |
|---|---|
| ஸ்வப்பனபல அகராதி | 0 8 |
| சர்வ ஜோதிட சஞ்சீவி | 1 8 |
| வானசேகர சப்தகோள தீபம் | 2 0 |
| ஒன்பது விஷ ஆருடம் | 2 8 |
| உடுதசா பிரதீபிகை | 0 12 |
| சோதிட கன்ம காண்ட மூலமும் உரையும் | 0 6 |
| பாராசாரியம் | 0 12 |
| வீமேசுர உள்ளமுடையான் | 1 0 |
| சிற்பநூல் பொக்கிஷம் | 1 0 |
| ஜோதிட அரிச்சுவடி | 0 12 |
| செங்கமலம் அல்லது ஓர் அற்புதக் கெவுளி நூல் | 0 12 |
| **வைத்திய நூல்கள்** | |
| வைத்திய வாதயோக ஞானசாத்திரத் திரட்டு | 1 4 |
| யாகோபு வைத்திய சிந்தாமணி | 1 8 |
| யாகோபு செந்தூர சூத்திரம் 150 | 0 10 |
| அகத்தியமுனிவர் பூரணசூத்திரம் 216 | 0 12 |
| யாகோபு வைத்தியம் 300 | 0 14 |
| யாகோபு வைத்திய சூத்திரம் 150 | 0 10 |
| நந்தீஸ்வரர் நிகண்டு 300 | 0 12 |
| இராமதேவர் அருளிச்செய்த சிவயோகம் | 0 5 |
| சட்டமுனிவர் முன்ஞானம் பின்ஞானம் | 0 4 |
| யாகோபு பஞ்சமித்திரம் 300 | 0 14 |
| புலஸ்தியர் கற்பம் 300 | 1 0 |
| யாகோபு வைத்திய சூத்திரம் 55 | 0 12 |
| சுன்ன சூத்திரம் 155 | 0 14 |
| யாகோபு சுன்னம் 600 | 1 8 |
| இராமதேவர் சிவயோகம் 200 | 0 8 |
| கருவூரார் வாத காவியம் 700 | 0 8 |
| யாகோபு வைத்தியவாத சூத்திரம் | 1 4 |
| அகஸ்தியர் பன்னிருகாண்ட வைத்தியம் | 0 12 |
| யாகோபு தண்டகம் | 0 12 |
| வைத்தியரத்தின சுருக்கம் 360 | 1 0 |
| அமுதகலைக்ஞானம் 1200 | 1 8 |
| அகஸ்திய முனிவர் கற்பு முப்பு 100 | 0 12 |
| அகஸ்தியர் வைத்தியபூரணம் | 0 12 |
| பஞ்சரத்னம் 500 | 2 0 |
| வைத்தியக் கல்லாடம் | 1 4 |
| யாகோபு வாதவைத்தியம் 300 | 0 14 |
| யாகோபு வாதவைத்தியம் 400 | 1 4 |
| கண்ணுசாமியம் | 1 8 |
| அகஸ்தியர் ரணவைத்தியம் | 0 12 |
| அகஸ்தியர் நயனம் 800 | 1 4 |
| **தேசீய நூல்கள்** | |
| சத்தியாக்கிரஹம் | 0 6 |
| இந்தியாவைப் பற்றிய உண்மை | 0 6 |
| சர்க்கா அல்லது கைராட்டினத்தின் புனருத்தாரணம் | 0 8 |
| லோகமான்யதிலகர் | 0 3 |
| பதஞ்சலியோக சூத்திரம் | 0 4 |
| காட்சி | 0 3 |
| நாட்டுப்பாட்டு | 0 4 |
| கண்ணன் பாட்டு | 0 8 |
| இராஜராஜசோழன் | 0 10 |
| அசோகசக்கரவர்த்தி | 0 8 |
| கும்பமகாராணி | 0 6 |
| இராஜரீக சாஸ்திரம் | 1 0 |
| பாரதபாட புத்தகம் | 0 3 |
| பாலபோதினி | 0 2 |
| **கதைகள்** | |
| திருக்குறள் நீதிக் கதை | 0 10 |
| சிறு கதைகள் | 0 8 |
| ஔவை | 0 6 |
| மூத்தாள் இளையாள் கதை | 0 4 |
| சீதாலக்ஷ்மி அல்லது தற்காத்துக் கொண்ட தாரம் | 1 8 |
| திருநெல்வேலி சீமை சரிதம் | 1 12 |
| சிலப்பதிகாரக் கதை | 0 8 |
| சிலப்பதிகார விளக்கம் | 1 0 |
| மனுநீதிச் சோழன் | 0 8 |
| தமிழ்ப் பஞ்ச லக்ஷண மூலம் பகுதி I (இலக்கணம்) | 1 0 |
| புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும் | 1 14 |
| குலோத்துங்க சோழன் கோவை | 0 12 |
| முத்திராலக்ஷணமும் பிரசாதமாலையும் | 0 2 |
| வர்த்தக யுக்தி | 0 6 |

**முருகவேள் புத்தகசாலை,**

12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.

## பாழான உலகம்

(சக்திதாசன்)

"அடே! தத்தா நான் சொல்வதைக் கேள். இனிமேல் நீ வக்கீல் கோபிநாதர் வீட்டுக்குப்போதல் கூடாது. நீ சிறு பிள்ளையல்ல. உனக்கு எத்தனை முறை சொன்னாலும் நீ அதைக் கவனிப்பதில்லை. நான் உனது நன்மைக்காகவே சொல்கிறேன். கோபிநாதர் பெண் கமலத்துடன் நீ எதற்காகப் பேசுகிறாய்? இந்த விஷயம் ஊரார் நால்வருக்குத் தெரிந்தால் என்மானம் போய்விடும்."

"மாமா! ஆணும், பெண்ணும் கடவுள் முன்னிலையில் சகோதரர்களேயன்றி வேறல்லரே! அவ்விதமிருக்க நாம் ஏன் கேவலமான எண்ணங்களை மனத்தில் கொள்ளல்வேண்டும்? நமது வீட்டில் நம் சகோதரியுடன் பழகினால் நம்மைப்பற்றிக் குறை கூறுவார் யார்? அதுபோலவே ஏன் பிறரையும் கருதுதல் கூடாது? நீங்கள் சொல்வது என்னவோ எனக்குச் சம்மதமாகத் தோன்றவில்லை."

* * *

தேவபுரி என்பது ஒரு சிறு பட்டணம். அவ்வூரிலே கோபிநாதர் என்றொருவர் வக்கீல் தொழில் செய்து வந்தார். கமலம் அவருடைய பெண். கமலத்துக்கு வயது பதினெட்டிருக்கும். அவள் பள்ளிக்கூடத்தில் படித்துவந்தாள்.

தத்தனுக்கு வயது இருபதிருக்கும். அந்த ஊரில் தாலுகா ஆபீசில் ஒரு குமஸ்தாவாக அவன் வேலை பார்த்து வந்தான். கமலமும் தத்தனும் சிறு வயது முதல் ஒன்றாக விளையாடியவர்கள். அதுபற்றியே வயது சென்ற பிறகும் தத்தன் கோபிநாதர் வீட்டுக்குச் செல்வான். கமலத்தை ஒரு சிறு குழந்தையெனவே அவன் மதித்து வந்தான். கோபிநாதர் ஒரு சீர்திருத்தவாதி. அவருக்கு மூடப்பழக்க வழக்கங்கள் பிடியா. ஆகவே அவர் தத்தனை ஒன்றும் சொல்வதில்லை. கமலமும் தத்தனும் அண்ணன் தங்கையெனவே பழகிவந்தனர். ஆனால் மற்றவர்கள் அவ்விதம் நினைப்பார்களா?

தத்தனுக்கு மாமா ஒருவர் இருந்தார். அவர் பெயர் ஹரிஹரர். அவர் உள்ளூரில் பெரிய மிராசுதாரர். தத்தனின் தாய் தந்தையர் இறந்த பிறகு தத்தன் ஹரிஹரரின் கண்காணிப்பிலேயே இருந்து வந்தான். தத்தன் கோபிநாதர் வீட்டுக்குச் செல்வது ஹரிஹரருக்குப் பிடிப்பதில்லை. ஆகவே அவர் ஒரு நாள் முற்கூறிய விதமாகத் தத்தனுடன் பேசிக் கொண்டிருந்தார். தாம் கூறிய சொற்களைத் தத்தன் லட்சியம் செய்யாதது கண்டு ஹரிஹரர் மிக்க வருத்தம் கொண்டார்.

தத்தன் தனியான அறை ஒன்றை வாடகைக்குப் பேசி அதில் வசித்து வந்தான். தத்தனுக்கு வடமொழிப்பயிற்சியுமுண்டு. ஓய்வு நேரங்களில் அவன் பகவத் கீதையைப் படிப்பான். கமலம் கல்வியறிவுள்ள பெண்ணல்லவா? இருவரும் பகவத்கீதையிலுள்ள சந்தேகங்களை விவாதிப்பர். ஒரு நாள் தத்தனும் கமலமும் பகவத்கீதையில் தத்தமக்குற்ற ஐயப்பாடுகளை எடுத்து விவாதம் செய்வதில் முனைந்திருந்தனர். அதுபோது ஹரிஹரர் அவ்வழியே தற்செயலாகச் சென்றார். தத்தனும், கமலமும் தனியே அறைக்குள் சம்பாஷிப்பதை அவர் கண்டார். 'சட்'டென அவருக்குச்சந்தேகம் உண்டாயிற்று. சத்தம் செய்யாது அந்த அறையருகே ஹரிஹரர் சென்றார்; கதவைஇழுத்து வெளியே தாளிடப்பார்த்தார்; பிறகு தாம் வந்தவழியே சென்றார். இதைத் தத்தன் கண்டான். மனிதர்க்குள்ள தாழ்வான எண்ணங்களை நினைத்து அவன் துக்கித்தான்; மெதுவாகக் கதவைத் திறந்தான். கமலம் வீடு சென்றாள்.

நாட்கள் பல சென்றன. ஊரெங்கும் கமலம் தத்தன்ஆகிய இருவரைப் பற்றிய பேச்சாகவே யிருந்தது.

"தத்தா! உனக்கு எவ்வளவு தூரம் நான்சொல்லியும் நீஅதை லட்சியம் செய்வதைக் காணேம். உன்னால் என் மானம் போகிறது. நீ இருப்பதைவிட இறப்பதேமேல்" என்று ஒருநாள் ஹரிஹரர் கூச்சலிட்டார். தத்தன் மௌனமாக வெளியே சென்றான்.

* * *

நடுநிசி. அச்சமயம் ஆற்றங்கரையில் ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான். அடுத்த நிமிஷம் அவ்வாலிபன் நதியுடன் கலந்தான். அவன் யாவன்? அவனே தத்தன். தன் தேகத்திலுள்ள ஒரு மயிரை நீத்தற்கே கவரிமான் உயிரைவிடும்; அக்கவரிமானைப் போன்றார், மானம் கெடுமாயின் உயிரை நீக்கத் துணியாதிருப்பரோ?

* * *

மறுநாட்காலையில் கோபிநாதர் வீட்டில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. காலையில் கமலம் எழுந்து காலைக் கடன்களை முடித்தபின் தன் மேஜையருகே சென்றாள்; தன் விலாசத்துக்கு ஒரு கடிதமிருக்கக் கண்டாள். அதைக் கையில் எடுத்துப் பிரித்துப்படித்தாள். 'ஓ' வென்று கதறியவண்ணம் அவள் கீழே விழுந்தாள். அடுத்த நிமிஷம் அவள் உயிர் உடலை விட்டுப் பிரிந்தது. அக்கடிதம் வருமாறு:—

அன்புள்ள கமலா!

இவ்வுலகம் மூடக் கொள்கைகள் நிறைந்தது. ஆணும் பெண்ணும் கலந்து பேசுவதை இவ்வுலகத்தார் அதிலும் சிறப்பாக நம் நாட்டார் இழித்துக் கூறுவர். இயற்கையில் உலவி, இயற்கையை அநுபவிக்கும் பறவை, மிருகம் முதலியவற்றைக் கண்டும் இவ்வுலகத்தாருக்கு அறிவுச் சுடர் தோன்றவில்லையாயின் அவர்களை என்னென்று கூறுவது? பக்தர் கடவுள் காட்சியை எங்ஙனம் கண்டார்? ஆண் பெண் வடிவங்களாக வன்றோ கண்டார்? பின்னை ஏன் மக்கள் ஆண் பெண் கலந்து உறவாடுவதைப் பழித்தல் வேண்டும்? இது பாழான உலகம். இவ்வூரார் நம்மைப் பழிக்கிறார். இவ்வுலகைவிட்டு நான் போகிறேன். அவ்வுலகில் ஆண் பெண் வேற்றுமை கிடையா. அங்குச் சந்தோஷத்தோடு வாழ்தல் கூடும்.




வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு ௧௫ தாதுஸ்ரீ ஆவணிமீ ௨௰ (4—9—1936) வெள்ளிக்கிழமை பரல் ௧௬


## ஜீவ ஜந்துக்களைப் பற்றிய சில கற்பனைகள்

(திரு. வி. நரசிம்ம ஐயங்கார்)

எப்பொருள் யார்யார் வாய்க்
கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு—திருக்குறள்.

தஞ்சாவூர் ஜில்லா நன்னிலந் தாலூகாவைச் சார்ந்த ஒரு சிறு கிராமத்தில் பார்ப்பான் ஒருவன் இருந்தான்; தன் வயலில் முதிர்ந்திருக்கும் பயிர் அறுப்பதை மேற்பார்வை பார்ப்பான் வேண்டி வயற்கரையில் ஒரு மரத்தின் நிழலில் வீற்றிருந்தான். அங்ஙனம் சிறிது நேரம் உட்கார்ந்திருப்ப, அவன் சமீபத்திலிருந்த ஒரு பெரும் பொந்தின் வழியாய்த் திடீரென்று கருந்தேட் கூட்டமொன்று வெளியேற, அதைக்கண்டு விடவிடத்து, நடுநடுங்கிப் பிராமணன் ஓடி யொதுங்கி யிருந்து, சற்று நேரஞ் சென்றதும், அவ்விடத்துக்குத் திரும்பி வந்து பார்த்தான். தேளொன்றுங் கண்ணுக்குப் புலப்படவில்லை; ஆனால் அவை விட்டுச் சென்ற துவாரத்தை மட்டும் நோக்கினான். உடனே ஒரு பெரும் பாறையை எடுத்து, அப்புழையினின்றும் வேறு தேள் வெளிவராதிருக்கும் பொருட்டும், வெளிப்போன கூட்டம் மறுபடியும் உள் நுழையாதிருக்கும் பொருட்டும் அத்துவாரத்தை நன்கு மூடிவிட்டான். கதிரவன் மேல்கடல் மூழ்க மறையவும், வேட்டை நோக்கிச் சென்ற தேள் கூட்டம் தம்மகந் திரும்பின. பிராமணன் கண்டதிசயித்துத் தூரநின்று வேடிக்கை பார்ப்பானாயினன். தேள்கள் பல ஒன்றாய்ச் சேர்ந்து, தம் வீட்டுத் தலைப்பில் வைத்திருக்குங் கல்லை அகற்றப் பெரிதும் முயன்றன. அவற்றின் முயற்சி பயன்படாதாயிற்று. எனினும், இக்கூட்டத்தைப் பாதுகாக்கும் போர்வீரத் தலைவன் போன்ற ஒரு பெருந்தேள் முன்வந்து, தன் தோழர்களை அப்புறம் விலக ஆணையிட, அவையும் ஒதுங்க, பின்பு தன் கொடுக்கை வேகமாக வளைத்து, மிகுந்த கோபத்துடன் கல்லின்மேல் தாக்க, அந்தோ! கல்லானது சிறுசிறு துண்டுகளாய் உடைந்து போயிற்று. தேள் கூட்டமும் வீடு சேர்ந்தது.

* * *

வியப்புடன் பார்த்திருந்த பார்ப்பான் மேற்போந்த கதையை எமது சிநேகிதரொருவருக்கு விவரித்துரைக்க அவரும் எம்மிடஞ் சொல்லிப் புன்னகைசெய்து "இக்கதை மெய்யோ பொய்யோ" என்று வினவினர். "பூனாவிலிருந்து சில மாதங்கட்குமுன் சென்னையில் வந்திருந்த மல்யுத்தம் வல்லாரில் ஒருவன் அம்மிக்கல் ஒன்றைத் தன் முன்னங்கைப் பலத்தால் இரண்டு துண்டாய் உடைக்கக் கண்டு வியப்புற்றோம். ஆனால், தேளொன்று தனது கொடுக்கினால் கற்பாறையை யுடைக்கக் கண்டதில்லை; இனிமேற் காணப்போவது மில்லை" என்று யாமும் விடைபகர, அக்கதையைப் பற்றி யாம் கொண்ட அபிப்பிராயத்தைக் குறிப்பாய் அவருமறிந்து நகைத்தனர். ஜீவப்பிராணிகளைப்பற்றி இத்தகைய பொய்க்கதைகள் மிகுதியும் நம்முள் வழங்கி வருகின்றனவென்றும், தமக்குத் தாமே கண்டு தேர்தலில்லாததினால் இதுபோன்ற கதைகளை மெய் யென்று நம்புகிறோமென்றும் "உயிர் நூற் பயிற்சியாலாய பயனென்?" (செந்தமிழ், தொகுதி-௩-பகுதி-௪-ல்) என்னும் வியாசத்து எழுதியிருந்தோம். உதாரணம் இரண்டொன்றுங் காட்டியிருந்தோம். ஈண்டும் அவ்விஷயத்தையே சற்று விவரித்துப் பரிசோதிப்போம்.

* * *

இத்தகைய பொய்க்கதைகள் வழங்குதற்குக் காரணம் தாமே உற்று நோக்காதது ஒன்று மாத்திரமேயன்று. சிற்சில சமயத்து மெய்யைக் கண்டிருப்பினும், அம்மெய் வெளிப்படாது அதைச் சுற்றி ஏராளமான பொய்க்கற்பனைகளை மனதுக்குத் தக்கவாறு புனைந்து வழங்குதலும் மிகுதியாயிருக்கின்றது. உதாரணமாக, மேற்சொல்லப்பட்ட கதையில், தேள்கள் கூட்டமாகப் போனதும் வந்ததும் உண்மையே. ஆனால் அவற்றிலொன்று கொட்டினதால் கற்பாறை பிளந்ததென்பது பாரிசேட லெங்காரத்தின்பாற்படும். அக்கதை அப்பிராமணனுடைய கற்பனாசக்தியைக் காட்டியதே தவிர அவனது உண்மை பேசுந் தன்மையை விளக்கிற்றன்று.

* * *

தேளானது தன் முதுகு வெடிக்க அதன் வழி குஞ்சு பொரிக்கின்றது என்று நம்மவர் கொண்டாடுங் கொள்கைக்குக் காரணம், குஞ்சு பொரிக்குந் தாய்த் தேளின் மேற்புறத்து அநேக குஞ்சுகள் புலப்படுவதினாற் போலும். ஆயினும், தாயின் முதுகு பிளப்பதால் குஞ்சுகள் வெளிவரவில்லை யென்பது அவ்விஷயத்தை நேரே கண்டார்க்குப் புலப்படும். தேளின் அடிப்புறத்திருக்கும் ஒரு சிறு துவாரத்தின் வழியே குஞ்சுகள் ஒன்றன் பின்னொன்று வெளிவர, அவை மிகச் சிறியவை ஆனபடியினாலும், பிறந்ததும் தாமே வெளியே சென்று உணவு முதலியவை சேகரிக்கச் சக்தியற்றவை ஆனபடியினாலும், அவற்றைத் தாயானது தன் போல் ஆமளவும் தன்முதுகின்மேற் சுமந்து செல்லும். அப்போழ்தத்து, இக்குஞ்சுகள் பன்முறையும் தோலுரித்து, வ்ரவரப்பருத்து, தந் தாய்போலாகவே, தாயின் முதுகை விட்டு விலகும். ஒவ்வொரு சமயத்து இருபது முப்பதுக் கணக்காய் இக்குஞ்சுகள் தாயின் மேற்புறத்து வாகன மேறிச் செல்லும். இவ்விநோதத்தை யறியாது, தாயின் முதுகு வெடிக்கக் குஞ்சு வெளிப்போம் என்று பொய்க்கதை புனைந்து வழங்குவார்களோ!

* * *

இங்ஙனமே, கரப்பான் பூச்சியும், முதுகு வெடித்துக் குஞ்சை ஈன்றதும் இறந்துவிடும் என்பதும் நம்மவர்கட்குள் வழங்காநின்ற ஒரு கொள்கை. இதுவும் முன்கதைபோல் அபத்தமே. முதன்முதல், கரப்பான்பூச்சி நேராகவே தாயின் வயிற்றிலிருந்தே குஞ்சாக வெளிவருவதில்லை. தாய்முட்டையிட, அம்முட்டையினின்று சிறிது காலஞ் சென்றபின் குஞ்சு வெளிவரும். உண்மை விஷயம் இங்ஙனமிருப்பக் கதை வழங்குதற்குக் காரணந்தான் என்னையோ? முட்டையினின்றுங் குஞ்சு வெளி வந்தபின் அது பன்முறையும் தோலுரிக்கும். இவ்வண்ணம் பாம்புபோல் தோலுரிப்பதையும், உரிக்கப்பட்ட தோலைக் கூடாக அப்பால் எறிவதையும், எறிந்த தோலுக்குள்ளிருந்து குஞ்சு வருவதையுங் கண்டு மக்கள் மயங்கினார்கள் போலும்!

* * *

பச்சைப்பாம்பு கண்ணைக் குத்துமென்பதும், அரணை, மண்ணுளிப்பாம்பு இவை நாவினால் தீண்டினவளவில் மரணம் நேரிடுமென்பதும், தேவாங்கு எக்காலத்தும் அழுதுகொண்டிருக்குமென்பதும், வௌவாலுக்கு வாய் வேறு, அபானம் வேறு என்ற வித்தியாசமில்லாது ஒரே துவாரத்தால் உண்ணும் மலசலம் போக்கும் என்பதும், இன்னும் இவைபோன்ற அநேக கதைகளின் உண்மை விசாரிக்குமிடத்து இவை யனைத்தும் பொய் யென்றே நிரூபிக்கலாம்.

* * *

மனிதனுடைய மற்றைய அவயவங்களை யெல்லாம் நீக்கி அவனுடைய கண்களினிடத்துப் பச்சைப் பாம்புக்கு அத்துணைக் காதலுண்டாகக் காரணமென்னவோ? அது ஒன்றை எதிர்த்து வருங்கால், வளையாது நேராகக் கம்பிபோல் செல்கின்றபடியாலும், எதிர்க்கும்பொருள் மனிதனாயின் அவன் பாம்பையே நோக்கி நிற்பதினாலும், அவனை நோக்கி நேராகப் பாம்புவரவே தன் கண்களைக் கொள்ளை கொள்வதற்கே அது வருவதாக இவன் தன் மனத்தில் நினைத்துக்கொள்வதாலும், அத்தீங்கற்ற பாம்பின்மேல் இப்பழி ஏற்பட்டதுபோலத் தோன்றுகிறது.

* * *

இதைப்போலவே அரணையும், மண்ணுளிப் பாம்பும் தீங்கற்றவையாம். இத்தீங்கற்ற சுசீலர்களை வீணில் ஜனங்கள் துன்பப்படுத்துவார்கள் என்று நம்பியோ இக்கதைகளைப் புனைந்து, அவை காரணமாக அச்செந்துக்களைக் கண்டதும் நம்மவர் ஓடும்படி நேர்ந்தது. தேவாங்கானது அழவேண்டிய காரணந்தான் என்னையோ? மனிதனைப்போல் சற்றேறக்குறைய உருவங் கொண்டிருந்தும், தானும் மனிதனைப் போல் ஜீவப் பிராணிகட்கெல்லாம் தலைவனாகவில்லையே என்று அழுகின்றதோ? அல்லது பிரமன் தனக்கு இத்துணைப் பெரிய கண்களைக் கொடுத்தும் பகற்காலத்துப் பார்க்குஞ் சக்தியற்றவையாகச் செய்தானே என்றுதான் அழுகின்றதோ? அல்லது தான் அழாமலிருக்கும்போதே அழுகின்றது என்று தன்மேல் பழிசொல்லுகிறார்களே என்றுதான் அழுகின்றதோ? தேவாங்கின் கண்கள் மிகப் பெரியவாயினும், அவற்றின் அமைப்பு அதிக வெளிச்சத்தைக் கண்டால் சுருங்குந் தன்மையது. ஆனால் பூனையின் கண் போல இராக்காலத்து நன்கு பார்க்கும் வல்லமை கொண்டன. பகற்காலம் பார்க்கவொண்ணாக் கண்கொண்டதாலும், இரவு முழுவதும் அலைந்து திரிந்து ஆகாரம் முதலியவை சேர்க்கவே தூக்கமில்லாமற் போவதாலும், பகற்பொழுதாவது தூங்குதல் அதற்கு முக்கியமானதாலும், அது கண்ணைத் திறவாது தலையைத் தொங்கவிட்டு, மிகவும் வாடினாற்போலத் தோன்றுகிறது. அது காரணம் பற்றி அது அழுகின்றது என்பது பொய்க் கதையே.

* * *

வௌவாலைப் பற்றிய கதையும் பொய்யாம். இறகு பெற்றிருப்பினும் அது ஒரு மிருகமே. முன்னங்கால் இரண்டும் இறகுகளாக மாறிநிற்கின்றன. பின்னங் கால்களின் நகங்கள் கொக்கிபோல் வளைந்திருக்கும், அவற்றி னுதவியால் தலை கீழாக வீட்டின் மச்சுப் பலகைகளில் மாட்டிக்கொண்டு தொங்கியாடும். அப்போது வௌவாலின் வாயானது கீழ்ப்புறம் நோக்குமல்லவா? ஆனால் அந்நிலையி லிருந்தபடியே மலஞ்சலம் போக்குவதால் அதற்கு வாயே அபானமென்றுசொல்லலுற்றார்கள். அங்ஙனஞ் சொல்வார் வௌவாலில் ஒன்றைப் பிடித்துப் பரீட்சித்திருப்பரேல், அவர் சொல்லும் பொய்யை மெய்யென்று ஆரவாரஞ் செய்யாதிருப்பர்.

* * *

இவர்கள் கூற்று முன்னொரு காலத்து யவனதத்துவ சாஸ்திரிகளுக்குள் இரு கட்சியார் கொண்ட கூற்றையொக்கும். அவ் விற்பன்னர்கட்கு ஒரு சந்தேகம் நிகழ்ந்தது; அதாவது, விளிம்புவரையில் ஒரு பாத்திரத்து நீரை வார்த்து அதில் இறந்த மீனைப் போட்டால் நீர் ததும்பும் என்றும், உயிர் கொண்ட மீனைப் போட்டால் நீர் ததும்பாது என்றும் செப்பினர் ஒருசாரார். அதற்கு மாறாகவே கொண்டார் மற்றொருசாரார். ஆனால், இறந்த மச்சத்தையாவது உயிருள்ள மச்சத்தையாவது பாத்திரத்து நீரில் போட்டு நேரே கண்டு, எவர் கொள்கை உண்மையது என்றறிய ஒரு திறத்தார்க்காவது மனதில் தோன்றவில்லை. அங்ஙனமே நம்மவர்களும் ஒரு கதையைக் கட்டி அதை யுலகத்துப் பரவும்படி செய்வதற்கு முன்னால் அக்கதைக்குத்தக்க ஆதாரம் ஏதேனுமுளதோ என்று பார்க்கு மறிவிலராய்

அத்தகைய கதைகளைப் புனைந்து பரப்பு கிறார்கள்.

* * *

நல்ல பாம்பு காற்றை யுண்டு காலங் கழிக்கு மென்பதும், சாரைப் பாம்புடன் புணருமென்பதும் மேற்போந்த வற்றைப்போல் உண்மை யற்றனவே. காற்றைப் புசித்துக் காலம் போக்குவதற்கு நல்ல பாம்பானது துருவ, பிரகலாதர்களைப் போல் ஏதேனுந் தவஞ் செய்கின்றதா? அது தின்று அழிக்கும் தவளையும் எலியும் கணக்கில் அகப்படுமோ? குண்டோதரனுக்குக் கூடப் பிறந்ததுபோல் தீனி தின்ன, நல்ல பாம்பு காற்றைப்பானஞ் செய்கிறதென்பது அதற்கே கோபத்தை விளைக்குமன்றோ? அதுபோலவே, அதன் கீழ்ச் சாதியைச் சேர்ந்த சாரைப்பாம்புடன் புணர்கின்றது என்ற அபவாதக் கூற்று அதன் காதில்பட்டால் அப்பழியுரைப் பாரை அது சும்மா விட்டு விடுமோ? சாரைப்பாம்பும் நல்லபாம்பும் வெவ்வேறு சாதியானதால், ஒரு காலத்தும் அவை ஒன்றோடொன்று சேராவாம். பெண் நல்லரவம் சாரைப்பாம்பைச் சற்று ஒத்திருப்பதினால், அதைச் சாரையென்றே கொண்டு மக்கள் மயங்கினார்கள் போலும்.

* * *

இவைபோன்ற கதைகள் நம்மவர்கள் மட்டுமே வழங்கி வருகின்றார்கள் என்னும் பிழை யெண்ணங் கொள்ளல் கூடாது. உதாரணமாக ஆங்கிலேயச் சிறுவர்கட்குள், ஒரு கதை இன்றைக்கும் வழங்கி வருகின்றது; அதாவது, தலைமயிரைச் சிறிது நேரம் ஓடுந் தண்ணீரில் போட்டு வைத்திருந்தால், அது பின்பு மலங்கு அல்லது விலாங்கு என்னுமொரு மீனாக மாறிவிடுமாம். அது சில வருடங்கட்கு முன் ஆங்கிலேயர்களில் வயது சென்றவர்களாலும் மெய்யென்று நம்பப்பட்டிருந்தது. இங்ஙனமே சலதேவதை யென்று ஒருத்தி நீரில் வசிப்பதாயும், மாலைக்காலத்தில் தண்ணீரின்மேல் வந்து பாடுவதாயும், அப்பாட்டின் இனிய ஓசையைக் கேட்டு மனிதர் சமீபத்தில் நெருங்க அவர்களை இரையாக்கிக் கொள்வதாயும் ஐரோப்பியருள் பலருஞ் சொல்லிக் கொள்ளுகிறார். ஆனால் இதற்குக் காரணமாய ஜீவப்பிராணி இன்னதென்று அன்னார் அறிந்தவரல்லர். இவர்கள் தேவதை யென்று மயங்குவது திமிங்கலம் போன்ற ஒரு கடல்வாசி. சாதாரணப் பார்வைக்கு ஒரு பெருமீன்போல் தோன்றினும், திமிங்கலத்தைப்போலவே அதுவும் தன் குட்டிகட்குப் பாலூட்டி வளர்க்கும். அது பெண்ணாயின், அதன் மார்பில் இரண்டு கொங்கைகளுண்டு. அது நீரில் வசிப்பதால் அதன் கால்கள் நீந்துவதற்குதவும் மீன்செட்டைகளாக மாறி நிற்கும். திமிங்கலத்தைப் போலவே இதுவும் காற்றை யுட்கொண்டு சுவாசம் விடும். அப்போது காற்றுக்காகக் கடலின் மேற்புறத்து வரும்; சுவாசம் உள்வாங்குவதினால் நீண்ட கில்லொலியொன்று தொனிக்கும். இத்தொனியே அது பாடுமினிய சங்கீதமாம். அதனுதவியால் மனிதரை இழுத்து விழுங்குமென்பது கற்பனையே.

* * *

இவைபோன்ற இன்னுமிரண்டொரு கதையை எடுத்துச் சொல்லி இவ்விஷயத்தை இத்தருணம் விடுப்போம். நத்தை, பனிநத்தை, ஊமச்சி என்று பல பெயர் கொண்டுலவும் கூடுகொண்ட சிறுசிறு பிராணிகள், பாம்புக்காக அக்கூடுகளில் நீர் கொண்டு செல்வதாகச் சொல்லுவார்கள். "துஷ்டனைக் கண்டால் தூர விலகு," என்ற பழமொழியும், "தீயாரைக் காண்பதுவுந் தீதே" என்ற கவியுமேற்பட்டிருக்க, இச்செந்துக்கள் நல்லார் தீயார் என்ற வித்தியாசமின்றிப் பாம்புக்கு நீர்கொண்டு போவது உண்மையாயின், உலகத்தார்க்கு உயர்ந்த ஒரு புத்திமதி புகட்டுவனவாகும். அந்தோ! இவை அத்தகையனவல்ல. தம் முதுகின்மேல் கூடு சுமந்து செல்வது, அபாய காலங்களில் தம்முடம்பை அதற்குள் சுருக்கி யிழுத்துக் கொள்வதற்கே; பாம்பிற்கு நீர் சுமந்து உலவுவதற்கன்று. இப்பொய் வழங்குவதற்குக் காரணம் ஒருவேளை இக்கூட்டை உடைத்தால் அதினின்றும் நீர் வெளி வருவதினாலேயோ?

* * *

குளவியானது வண்டைத் தன்னின மாக்குகின்றது என்னும் கதை வெகு நாளாக வழங்கி வருகின்றது என முன்னோர் சமயத்துச் சொல்லப்பட்டிருந்தது. கம்பரும் குளவி "வண்டினைத் தன்னின மாக்கு மாபோல்" என்று பாடிப் பெரிதும் வழுவினர். இக்கதை யுண்டானதற்குக் காரணம் பின் வருமாறு:—தான் முட்டையிடுவதற்கு முன்னால் குளவியானது மண்ணாலாவது மெழுகாலாவது பல்லறைகள் கொண்ட கூடு கட்டும். அவ்வறை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு முட்டையிட்டு, அம்முட்டை பூச்சிகளுக்காய பல்லுரு மாறி வெளிவரும்வரை அதற்குத் தீனிக்காக வண்டின் புழுக்களைத் தன் கொடுக்கால் தீண்டி, உயிர் நீத்ததும் நீக்காததுமாய் அவற்றை அவ்வறைகளில் வைத்து அறையின் வாயை மூடிவிடும். சிலநாட் செல்லவும், குளவி முட்டையினின்று சிறு புழு வெளி வந்து தனக்கு முன்னரே இரையாக வைத்திருக்கும் வண்டின் புழுக்களை யுண்டு பருத்துப் பின்பு தன் புழுவுரு மாறிக் குளவியாய், அறையின் சுவரைப் பிளந்துகொண்டு வெளியேறும். குளவி கூடுகட்டுவதையும், வண்டின் புழுவைக் கூட்டில் வைப்பதையும், பிறகு கூட்டிலிருந்து குளவியொன்று வெளிவருவதையும் நம்மவர்கள் நேரில் பார்த்தார்களே யொழிய, குளவி தானே முட்டையிடுவதையும், அது வளர்ந்து வண்டின் புழுவை யுண்பதையும் கண்டிலர். அக்காரணத்தாலன்றோ வண்டின் புழுவே குளவியாக மாறிற்று என்று மயங்கினார்கள். இறைவனைப் போலாவதற்கு நம்மைச் சூழ்ந்திருக்கும் மாயையை நாம் வெல்லவேண்டும் என்று முறையிடும் நம்மவர்க்கு இம்மயக்கந் தகுதியோ?

—"செந்தமிழ்"

# எதிரொலி

## சமஸ்தான மக்கள்

இந்திய சமஸ்தானங்களில் எட்டு கோடி மக்கள் இருக்கிறார்கள்; ஜெர்மனியின் ஜனத்தொகை ஆறுகோடியே அறுபது லக்ஷம்; கிரேட் பிரிட்டனில் நாலரைகோடி; இதாலியிலும் நாலரை கோடி; பிரான்ஸில் நான்குகோடி. 1935-ம் வருஷத்தில் வழங்கப்பட்ட சீர்திருத்தங்களுக்காக யோசிக்கப்பட்ட போது பிரிட்டிஷ் அரசாங்கமும், பார்லிமெண்டும் இந்திய சமஸ்தான மக்களைப்பற்றி அறவே மறந்தன. இது போன்று ஜெர்மனி, கிரேட் பிரிட்டன், இதாலி, பிரான்ஸ் முதலிய நாடுகளை மறத்தல் கூடுமா?

இந்திய சுதேச மன்னர்களையே ஆயுதங்களாகக் கொண்டு இந்தியத் தேசியத்தை ஒழிக்கப் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் விரும்புகிறது; இச்சுதேச மன்னர்கள் பொதுஜன நன்மைக்கு விரோதிகளென்று உணர்ந்திருக்கிறது; பிரிட்டிஷ் இந்தியாவிலிருப்பவருக்கும், சுதேச சமஸ்தானங்களி லிருப்பவருக்கும் ஒருவித வித்தியாசமும் இல்லையென்பதை அரசாங்கம் அறியாமலா இருக்கிறது? பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ளவரிடத்துக் காணப்படுவது போலவே சமஸ்தான மக்களிடத்தும் தேசிய உணர்ச்சி உண்டாயிருக்கிறதென்பதும் தெரியும். இவையெல்லாவற்றையும் உணர்ந்த அரசாங்கம் சுதேச மன்னர்களுக்கு அதிகப்பிரதிநிதித்துவத்தையும், சமஸ்தான மக்களுக்கு மிக்குறைந்த பிரதிநிதித்துவத்தையும் வழங்கியிருத்தல் நியாயமாகுமா? பிரிட்டிஷாரால் இந்தியாவின்மீது சுமத்தப்பட்ட இச் சீர்திருத்தங்களை அழிக்கவேண்டுவது இந்திய சமஸ்தான மக்களின் முதல் கடமையல்லவா?

—'மாடர்ன் ரெவ்யூ.'

## நாட்டுப் பாடல்

நாம் வாழும் தமிழ்நாட்டில், புத்தகங்களில் அச்சிடப்படாமல், ஓலைகளிலும் வரையப்படாமல், வாய் மூலமாகவே பரம்பரையாக வந்துள்ள நாட்டுப்புறப் பாட்டுக்கள் எத்தனையோ உள்ளன. இப்பாட்டுக்களை நாம் மூட நம்பிக்கைகளும் அறியாமையும் நிறைந்த பழைய சமூகத்தினரின் பொழுது போக்குக்காக ஏற்பட்ட பாட்டுக்களாக எண்ணி ஏளனம் செய்வது மதியீனமாகும். இப்பாட்டுக்கள் புராதனத் தமிழரின் சமூக மனோநிலையையும், ஆசைகளையும், எண்ணங்களையும், நம்பிக்கைகளையும் பிரதிபலிக்கும் சிதங்களாகும். * * *

தற்காலப் பெண்களோ இவற்றைப் பாடம் செய்து கொள்ளுவது கௌரவக் குறைவு என்று எண்ணுகின்றார்கள். குழந்தைகளுக்கு நித்திரை யுண்டுபண்ணப் பழைய காலத்திய மாதர்கள் பாடிய தாலாட்டுகளில் எத்தனை இக்காலத்திய இளம் மாதருக்குத் தெரியும்? கூலிவேலைசெய்யும் பெண்களும் கூடக் காரை குத்தும்போதும், களை பிடுங்கும் போதும், நீர் இழுக்கும் போதும் தமது களைப்பு நீங்கும் பொருட்டு அழகிய கருத்துக்கள் நிறைந்த பாட்டுகள் பாடுவது பழைய காலங்களில் வழக்கம். இப்பொழுதோ தொழிலாளர் இப்பாட்டுகளுக்குப் பதிலாகக் காரீரோட்டமில்லாத பெரும் கட்டிடங்களில் இயந்திர ஓசைக்கு நடுவில் நின்று வேலைசெய்கின்றனர். வீதியில் பிச்சைக்கு வரும் ஆண்களும் பெண்களுங்கூடச் சிற்சில சமயங்களில் பொருள் நிறைந்த பாட்டுக்களைப் பாடுவதை நாம் கேட்கிறோம். பழையகாலங்களில், 'சின்னி பொம்மை' என்றொரு சிறு மரத்தாலான பெண் பதுமையைக் கையில் வைத்துக்கொண்டு, நாட்டுப்புறப் பெண்ணொருத்தியின் இன்ப துன்பங்களைப் பாட்டு ரூபமாக, அப்பொம்மையை ஆட்டிக்கொண்டே விவரித்துரைக்கும் பிச்சைக்காரிகள் வருவதுண்டு. இத்தகைய பாட்டுக்களிற் பல நமது சமூக நிலையை நன்றாக விளக்கிக் காட்டுவனவாகும். இன்னும் பல காதல் சுவையும், பக்தி ரஸமும், இயற்கைவர்ணனையும் ததும்புபவை. கும்மி, கோலாட்டம், நிலா விளையாட்டுக்கள், விவாககாலத்தில் வேடிக்கைகள் இவை சம்பந்தமான பாட்டுக்கள் யாவும் சுவை மிகுந்தனவாகும். * * *

கிராமத்தாருடைய களங்கமற்ற உள்ளத்தையும், ஆடம்பரமற்ற வாழ்வையும், ஆர்வம் மிகுந்த நம்பிக்கைகளையும் விளக்கும் இப்பாட்டுக்களை நம்மிடமிருந்து நழுவாமல் பாதுகாப்பது நமது கடமை. தமிழ்ச்சமூகத்தின் முன்னேற்றத்தில் ஊக்கம் கொண்ட பெரியோர்கள் இவ்விஷயத்தில் பெரும் முயற்சி செய்வது நலமாகும்.

—'ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்'

## மாஸ்கோ எச்சரிக்கை

ஜெர்மனியோடு சமாதானம் செய்து கொள்வதன் மூலம் இதாலியின் வீரத்தை அடக்கிவிடலாம் எனக் கிரேட் பிரிட்டன் நினைக்கிறது. உலக சமாதானத்துக்கு முக்கியமாகக் கிரேட் பிரிட்டன் நிற்பது நல்லது. ஜெர்மனி சில நாடுகளை ஒருவித காரணமுமில்லாமல் சண்டைக்கு இழுக்கிறது. பிரிட்டன் ஜெர்மனியோடு ஒப்பந்தம் செய்து கொண்டால் அந்நாடுகளுக்கும் பிரிட்டன் விரோதியாகும்.

—'இஸ்வெஸ்டியா—மாஸ்கோ'

## இதாலியின் நன்மைக்காக

எகிப்து, சூடான் முதலிய நாடுகளில் பெரிய கலக்கங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இக்கலக்கம் ஆப்பிரிக்கா முழுவதும் பரவுகிறது. இச்சமயத்தில் இங்கிலாந்து செய்ய வேண்டுவதென்ன? இக்கலக்கங்களுக்குக் காரணமாகிய ஐரோப்பிய துஷ்ட மிருகத்தை அடக்கவேண்டுவது இங்கிலாந்தின் கடமையல்லவா? இந்தஐரோப்பிய மிருகம் எனப்படுவார் யார்? முசோலினியன்றோ? உலக சமாதானத்தையும், உலகத்தின் செல்வநிலையையும் கலக்குபவர் அவரே. உலக நல்வழிக்காகவும், பிரெஞ்சு மக்களின் பாதுகாப்புக்காகவும் நெப்போலியன் தோற்கடிக்கப் பட்டார். இக்காரணங்களைக் கொண்டே முசோலினியும் தோல்வியடைதல் வேண்டும். இங்கிலாந்து இந்தக்கொள்கையோடு சண்டையில் இறங்கினால் சாம்ராஜ்யத்திலுள்ள இதரநாடுகள் துணைபுரியுமென்பதில் சந்தேகமில்லை.

—'ரிவ்யூ ரொடேஷ்யா—சாலிஸ்பரி'

## தீவிர வாழ்க்கை

சென்ற பல நூற்றாண்டுகளைவிட இந்நூற்றாண்டில் இளைஞர் வெகு சீக்கிரத்தில் வளர்ந்து விடுகிறார். இதற்குப் பிரதிபலனாக அவரது ஆயுள்நாட்கள் குறைகின்றன. இவ்வித சம்பந்தம் அமெரிக்க அறிவியல் நிபுணர்களால் நிர்ணயிக்கப்பட்டது. வளர்ச்சிக்கும் வயதுக்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றி அவர்கள் அநேக ஆராய்ச்சிகளைச் செய்திருக்கிறார்கள். உடல் வளர்ச்சியைக் குறைத்துக் கொண்டால் சராசரி 120 வயதுக்கு மேல் வாழ்தல் கூடுமென அமெரிக்க வைத்தியக்கழகப் பத்திரிகை ஒன்று கூறுகிறது.

—'நியூயார்க் டைம்ஸ்'

## வண்டுகள்

யுத்தகாலத்தில் வண்டுகள் மிகவும் உபயோகமாகின்றன என்று பேர்னர்ட் கூலர் கூறுகிறார். இவர் ஒரு ஜெர்மானிய நிபுணர். இவை பழக்கப்பட்டால் சமாசாரங்களை ஒரு பட்டாளத்திலிருந்து மற்றொரு பட்டாளத்துக்குக் கொண்டு செல்ல உபயோகமாகின்றன என்று அவர் கூறுகிறார்; இவ்வண்டுகளின் உடலில் சில வர்ணங்களைத் தடவுதல் கூடுமென்றும், அவ்வர்ணங்கள் மூலமாகவே சமாசாரங்களை அனுப்புதல் கூடுமென்றும் கூறுகிறார்.

—'மாடர்ன் ரெவ்யூ'

## உயிர்போகும்வரை பட்டினி

இராமச்சந்திர சர்மா உண்ணா விரதம்

பண்டித இராமச் சந்திர சர்மா சென்ற வருஷம் காளிகட்டம் கோயிலில் பலியை நிறுத்தும் பொருட்டுப் பல நாள் உண்ணாவிரத மிருந்ததையும், பண்டித மாளவியாவின் முயற்சியால் அவர் உண்ணா விரதத்தை நிறுத்தியதையும் பலர் அறிவர். இப்பொழுது பண்டித சர்மா அதே காரணத்தால் உயிர் போகும்வரை உண்ணா விரதமிருக்கப் போவதாக அறிவித்துள்ளார். 'காளி தேவி' உதவி செய்வா ரென்று அவர் கூறுகிறார்.







## இந்தியா சட்டசபை

### அவசரப் பிரேரணை

இந்தியா சட்டசபை சென்ற திங்கட்கிழமை ஆரம்பமாயிற்று. ஆரம்ப தினத்தன்றே காங்கரஸ் கட்சிக்குச் சட்டசபையில் வெற்றி கிடைத்தது. திரு. சத்தியமூர்த்தி ஓர் அவசரப் பிரேரணையைக்கொண்டுவந்தார். ஐ.ஸி.எஸ். நியமனங்கள் போட்டி மூலமே நடைபெறுதல் வேண்டுமென்று 1919ம் வருஷத்திய இந்திய அரசாங்கச் சட்டம் கூறுகிறதென்பதும், அரசாங்கத்தார் நியமனமூலம் ஐ. ஸி. எஸ். பரீட்சைக்குப் பொறுக்குவது கூடாதென்பதும் அப்பிரேரணையின் சாரம். அப் பிரேரணை 56 ஓட்டுகளைச் சாதகமாகப் பெற்று நிறைவேறியது.

### இந்தியாவைப்பற்றிப் பிரசாரம்

வெளி நாடுகளில் படக்காட்சிகளின் மூலமும் பிரசங்களின்மூலமும் இந்தியாவுக்கு விரோதமாகப் பிரசாரம் நடைபெறுவதைக் குறித்துக்கேட்கப் பட்டபொழுது பின்வரும் பதிலளிக்கப் பட்டது.

இந்தியாவைப்பற்றி வெளிநாடுகளில் அவதூறான பிரசாரம் செய்யப்படுவது பற்றி அரசாங்கத்தார் ஆலோசித்ததாகவும், சர்வதேசசங்கத்தில் இவ்விஷயத்தை ஆலோசிப்பதால் பலனேற்படாதென்றும், நேயமுறையில் தவறான பிரசாரம் நடைபெறும் நாடுகளுக்கு அறிவித்து விடலாமென்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறதென்றும் அப்பதிலில் குறிப்பிடப்பட்டன.

### ரேடியோ மூலம் பிரசாரம்

திரு. சத்தியமூர்த்தி சாமாரியான கேள்விகளைக் கேட்டார். அதிகாரிகள் மிகவும் கஷ்டப்பட்டுப் பதில் சொல்ல நேர்ந்தது.

ரேடியோ மூலம் அரசியல் பிரசாரம் செய்யலாமாவென்று திரு சத்தியமூர்த்தி கேட்ட கேள்விக்குப் பின்வரும் பதிலை ஸர் பிராங்க் நாய்ஸ் கூறினார்.

'தேர்தல்பிரசாரம், பிரசங்கம் இவை போன்ற பலவற்றிற்கும் ரேடியோவை உபயோகப்படுத்தல் கூடாதென்று அரசாங்கம் உத்திரவிட்டுளது'

சத்தியமூர்த்தி 'இராஜப்பிரதிநிதி ரேடியோமூலம் அரசியல் பிரசங்கம் செய்கிறாரே? அவருக்குத்தனி உரிமையேன்?' என்று கேட்டார்.

ஸர். ஸர்க்கார், திரு சத்திய மூர்த்தியின் கேள்வி இராஜப்பிரதிநிதியின் நடத்தையைப்பற்றிக்குறைகூறுவதைப் போன்றிருப்பதாகக் கண்ணீர் வடித்த பொழுது திரு சத்தியமூர்த்தி திரும்பவும்அதேகேள்வியைமேலும்இருமுறை அழுத்திக் கேட்டார். அதைப்பற்றி ஒன்றும் கூறுவதற்கில்லை யென்று ஸர் பிராங்க்நாய்ஸ் கூறினர். காப்புவரிச் சபை ரத்துசெய்யப்பட்டதுபற்றி திரு சத்திய மூர்த்தி ஓர் அவசரப் பிரேரணை கொண்டு வந்தார். வெகு நேர விவாதத்தின் பிறகு இப்பிரேரணை திரும்பப் பெற்றுக் கொள்ளப் பட்டது.

### அனுமதி கிடைக்காத தீர்மானங்கள்

பிரிட்டன் யுத்தத்தில் கலக்க நேரிட்டால் அதற்கு உதவி செய்ய இந்தியாவால் இயலாதென்று திரு. சத்திய மூர்த்தி ஒரு தீர்மானம் கொண்டு வரப் போவதாகத் தெரிவித்திருந்தார். இதைக் கவர்னர் ஜெனரல் அனுமதிக்கவில்லை.

இந்தியரின் சுயமதிப்பைக் காப்பாற்றும் நோக்கத்துடன் இந்தியாவிலிருக்கும் கீழ்த்தர உத்தியோகஸ்தர்களை ஐரோப்பியர் மயமாக்க வேண்டுமென்று திரு. பிரகாசர் அறிவித்த தீர்மானத்துக்கு அனுமதி கிடைக்கவில்லை.

அந்தமான் தீவு, கைதிகளின் சுவர்க்கம் என்று ஹோம் மெம்பர் கூறியிருப்பதால் இந்திய அரசாங்கத்தின் தலைநகரை அந்தமானுக்கு மாற்றலாமென்று லாலாஷாம்லால் கொண்டு வந்த ஆலோசனைக்கு அனுமதி கிடைக்கவில்லை.

### வெளியேற்றம்

அரசாங்கத்தாரால் காப்புவரிச் சபையின் அறிக்கை, சட்டசபையைக் கலவாதுவெற்றுக்கொள்ளப்பட்டது. அதைக் கண்டித்து ஸ்ரீ. அவினாசிலிங்கம்செட்டியார் இந்தியா சட்ட சபையில் ஓர் அவசரப் பிரேரணை கொண்டு வந்தார். இப்பிரேரணைக்கு ஓட்டெடுக்க முடியாதவாறு அரசாங்க அங்கத்தவர் காலங்தாழ்த்தினர். இதைப் புலாபாய் தேசாய் கண்டித்தார். மேலும் தலைவர் பொக்கிஷ மெம்பரைப் பேச அனுமதித்தார். இதனால் காங்கரஸ் அங்கத்தவரும் சுயேச்சைக் கட்சியாரும் சபையை விட்டு வெளியேறினர். பின்னர் பொக்கிஷ மெம்பர் காங்கரஸ்காரரைத் தூஷித்துப் பேசினர்.

# கலம்பகம்

இந்திய அரசாங்கக் கல்வி அங்கத்தவரான ஸர். ஜகதீசப்பிரஸாத் இம்மாதம் 13-ந்தேதி மாலை சென்னைக்கு வருவார்.

ராய்ச்சூர், குல்பர்கா முதலிய பிரதேசங்களில் பஞ்சத்தால் வருந்துவோருக்கு உதவ ஹைதராபாத் அரசாங்கம் ஒரு லக்ஷரூபாய் அனுமதித்துளது.

பொறைக் கொடாவத்தை என்னும் கிராமத்தில் ஒருவர் வீட்டுக் கொல்லையில் உள்ள தென்னமரம் ஒன்றில், ஒருபக்கம் செவ்விளநீர்க் குலையும், மறுபக்கம் சாதாரணக்குலையும் சேர்ந்து காணப் படுகின்றனவாம்.

ஜப்பல்பூர் ஜில்லா போர்டின் உபத்தலைவர் அந்த ஜில்லா போர்டிலுள்ள உபாத்தியாயர்களையும், தலைமை உபாத்தியாயர்களையும் காங்கரஸ் அங்கத்தினராகுமாறு வேண்டிச் சுற்றறிக்கை அனுப்பியுளார்.

சென்னைக்குப் பசிப்பிணியாளர் வந்திருந்தாரல்லவா? அவர்கள் தங்கள் விண்ணப்பத்தைச் சட்ட சபையில் அளிக்க முயன்றார்கள்; அனுமதி கிடைக்கவில்லை. ஆகவே திரும்பிக் கள்ளிக்கோட்டைக்குச் சென்று விட்டார்கள்.

சித்தூர் நகரசபை இம் மாதம் முதல் தேதி முதல் இரண்டு வருஷத்துக்குக் கலைக்கப்பட்டு விட்டதாக அரசாங்கத்தார் அறிவித்துளார். சித்தூருக்கு, ஈரோடு நகர சபைக் கமிஷனர் ஸ்ரீ. ராமதாஸ் நாயுடு விசேஷ அதிகாரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

மதுரை ஜில்லாபோர்டின் வருமானம் அதிகமில்லை யாதலால் அதைப் பிரித்தல் கூடாதென்றும், வருவாய் அதிகமில்லாத ஜில்லாபோர்டுகளின் விஷயத்தில் அரசாங்கம் தலையிடுதல் தகாதென்றும் அந்த ஜில்லா போர்டார் ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறார்.

தெனலியில் ஐந்து ஆமணக்கெண்ணெய்த் தொழிற் சாலைகளைச் சேர்ந்த ஐம்பது தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார். கூலியை இரண்டுவருஷங்களுக்கு முன்பிருந்தது போல அதிகாரிகள் அதிகரிக்காததே இதற்குக் காரணமென்று கூறப்படுகிறது.

வட ஆற்காடு ஜில்லா உபாத்தியாயர்கள் மகாநாடு இவ்வாரம் வாலாஜாபாத்தில் நடைபெற்றது. தஸரா முதலிய விடுமுறை நாட்களில் மாணவர்களுக்கும் உபாத்தியாயர்களுக்கும் குறைந்த கட்டண டிக்கட்டுகள் அளிக்குமாறு ரயில்வே கம்பெனியைக் கேட்டுக் கொள்வதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மதுராந்தகத்தில் பொன்னியம்மன் நடுவயலில் நிற்கிறது. அந்த வயல் வழியாக அம்மனை ஊர்வலமாக எடுத்துச் செல்லுதல் கூடாதென வயலின் சொந்தக்காரர் ஆட்சேபித்ததன் பேரில் கோவில் தர்மகர்த்தர் அரசாங்க அதிகாரிகளிடம் உதவிகோரினர். விசாரணை நடந்துவருகிறது. போலீசார் அம்மனைக் காத்து வருகிறாராம்.

பெரியகுளம் தாலுகா சம்பத்துக்கு அருகிலுள்ள காமய்ய கவுண்டன் பட்டி கிராம அரசியல் மகாநாடு இவ்வாரம் நடைபெற்றது ஸ்ரீ மட்டப் பாறை வேங்கட்டராம அய்யர் தலைமை வகித்தார். பக்கத்துக் காடுகளில் கால்நடைகள் மேய்வதற்காக அரசாங்கம் வரி விதித்திருப்பதைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறை வேற்றப்பட்டது.

பனைக்குளம் கிராம அரசியல் மகாநாடு சென்ற வாரம் எல். கிருஷ்ணசாமி பாரதி தலைமையில் நடைபெற்றது. காந்தி இர்வின் ஒப்பந்தப்படி பனைக்குளம் கிராமவாசிகள் உப்பெடுக்க அனுமதிக்குமாறு அரசாங்கத்தையும் இராமனாதபுரம் சமஸ்தானத்தாரையும் கேட்டுக் கொள்வதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

ஆப்கன் அமீராக விருந்த ஷேர் அலிகானின் பேரப்பிள்ளை ஒருவர் பம்பாயில் வேலைக்காக அலைகிறார். இவருடைய பெற்றோர் இந்தியாவில் அரசியல் கைதிகளாக விருக்கிறார். இந்த அரசகுமாரர் இந்தியாவில் பிறந்தவர். இவரது தகப்பனருக்கு, அமானுல்லா காலத்தில் மாதம் ஆயிரம் ரூபாய் பென்ஷன் கிடைத்து வந்தது; இப்பொழுதில்லை.

கீகிநாடா நகரசபையார் தம் நகர சபைக்குக் கமிஷனர் தேவை யில்லை என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்; நகரசபையின் வருவாய் அதிகமின்மையால் கமிஷனருக்கு வருஷம் ஒன்றுக்கு நாலாயிரம் ரூபாய் அளித்தல் முடியாதென்றும், ஆகவே கமிஷனரை நியமித்தல் வேண்டாமென்றும் அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

தக்ஷிணசபை மிதவாதிகளின் தேர்தல் பிரசாரத்தை ஆரம்பிப்பதற்காக ஒரு பொதுக் கூட்டம் புனாவில் நடந்தது. ஸர். கவாஸ்ஜிஜிஹாங்கீர் பொதுக் கூட்டத்தில் பேசினர். தம் பிரசங்கத்திடையே 'காங்கிரஸிலிருந்து கெட்டுப் போன குழந்தை' என்று ஜவஹரைக் குறித்துத் துவேஷமாகக் கூறினர். இதனால் கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது. கூட்டம் கலைந்தது.

கராச்சியில் ஒரு கிழவி வாசனைத் தைலம் விற்கும் குஜராத் பெண்மணியைப்போல வேடம்பூண்டு ஒரு ஹிந்து ஸ்திரீயின் வீட்டிற்குள் நுழைந்தாள். மயக்கந்தரும் தைலத்தை அந்தஹிந்து ஸ்திரீயின் முகத்தருகில் பிடித்தாள். அந்த ஹிந்துப் பெண்மணி மயக்க முற்று வீழ்ந்தார். கிழவி ஆயிரம் ரூபாய் பெறுமான நகைகளைக் கொள்ளையடித்துக்கொண்டு போய் விட்டாள்.

வேலூர்ஜில்லா போர்டில் காலியான 11 ஸ்தானங்களுக்கு நடந்த உபதேர்தலில் ஐவர் போட்டியின்றித்தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஆற்காட்டுக்கு ஸ்ரீ பால சுந்தர நாயகரும், ராணிப்பேட்டைக்கு ஸி. வேங்கட்டரங்கம் நாயுடுவும், தேர்ந்தெடுக்கப் பட்டனர். பாஞ்சிக்கு ஸ்ரீ கிருஷ்ணதாஸ் ரெட்டியும், பனப்பாக்கத்துக்கு 'ஆனந்தபோதினி' ஸ்ரீ முனிசாமி நாயுடுவும், அரக்கோணத்துக்கு ஸ்ரீ பொன்னுசாமிரெட்டியாரும் தேர்ந்தெடுக்கப்பட்டார். இம் மூவரும் காங்கரஸ்வாதிகள்; பெருவாரியான ஓட்டுக்களால் வெற்றிபெற்றார்.

## சென்னைச் சட்டசபை

### நில அடமானத்தடை மசோதா

சென்னைச் சட்டசபையில் நில அடமானத்தடை மசோதா ஆலோசனைக்கு வந்தது. இம்மசோதாவைப் பிரேரித்தவர் ஸ்ரீ. பி. வி. கிருஷ்ணையசௌத்ரி. விவசாயிகள் தங்கள் நிலத்தை அடமானம் வைத்துக் கடன் வாங்கினால் கடன் கொடுத்தவர் தம் கடனுக்குப் போகப் பாக்கியுள்ள நிலத்தை இருபது வருஷங்களுக்குமேல் அனுபவிக்க முடியாமல் இம்மசோதா தடுத்து விடுமென்று அவர் கூறினர்.

### பலன்

இம்மசோதாவால் 20 வருஷங்களில் நிலம் கடன்வாங்கிய விவசாயிகளுக்குத் திரும்பக்கிடைத்துவிடுமென்றும், கடன் பளு குறையுமென்றும், கடன் கொடுத்தவர் தமது பணத்தை நிலத்தின் இருபது வருஷ வருமானத்தால் அடைதல் கூடுமென்றும் அவர் விவரித்தார். பொதுஜனக்கருத்தை அறிதற்பொருட்டு இம்மசோதா அனுப்பப்படல் வேண்டுமென்று ஸ்ரீ. ஸி. ஆர் ரெட்டி கொண்டு வந்த தீர்மானம் நிறைவேறியது.

### தொழிலாளர் பாதுகாப்பு மசோதா

"தொழிற்சாலைகளிலும், கம்பெனிகளிலும் ஊழியம் செய்யும் தொழிலாளர்க்குப் பாதுகாப்பு நிதி ஏற்படுத்துவதே இம் மசோதாவின் நோக்கம். நிரந்தர ஊழியர் ஒவ்வொருவரின் பொருட்டும் அவரது ஒரு மாதச் சம்பளத்தை அவரது முதலாளி இங்கிதிக்கு அளித்தல் வேண்டுமென்றும் இம் மசோதா கூறுகிறது. ஒருமாத முன்னறிவிப்பின்றி எந்த முதலாளியும் தம் வேலைக்காரரை நீக்குதல் கூடாதென்றும், இம் மசோதாவில் வற்புறுத்தப் பட்டுளது" என்று இம்மசோதாவைப் பிரேரித்த ஸ்ரீ. வி. வாசுதேவ் கூறினர். இம்மசோதாவைத் தனிக்கமிட்டியின் பரிசிலனைக்கு அனுப்புமாறு அவர் வேண்டினர். அவரதுவேண்டுகோளுக்கு எதிராக 44 பேரும் சாதகமாக 25 பேரும் ஓட்டுக் கொடுத்ததால் மசோதா தனிக் கமிட்டிப் பரிசிலனைக்கனுப்பப்படும் பிரேரபணை தோல்வியுற்றது.

### கேள்விகள்

"1936ம் வருஷத்தில் சேலம் ஜில்லாவில் புதிதாக எத்தனை கள்ளுக் கடைகளை ஏற்படுத்த உத்தேசம்? இது யாருடைய ஏற்பாடு? கலால் ஆலோசனைக் கமிட்டியாருக்கு இது விஷயமாக என்ன அபிப்பிராயம்?" என்று ஸ்ரீநாச்சியப்பக் கவுண்டர் கேட்டகேள்விக்குப் பின்வரும் பதில் கிடைத்தது.

### பதில்

அரசாங்கத்தாருக்கு இதைப் பற்றித் தகவலில்லை. ஆனால் கலால் இலாகாச் சட்டங்களை மக்கள் மீறுமல் தடுப்பதற்குப் புதிய கள்ளுக்கடைகளை ஏற்படுத்துவது வழக்கம். புதுக்கள்ளுக்கடைகளை ஏற்படுத்துவதன் மூலம் கள்ளத்தனமாகக் கள்ளிறக்குவதைத் தடுக்கலாம்.

### அந்நிய அரிசி இறக்குமதி

"1936-ம் வருஷம் ஜனவரிமாதம் முதல் வெளிநாட்டிலிருந்து நொய்யரிசி, முழுஅரிசி, நெல்முதலியன எவ்வளவு இறக்குமதி செய்யப் படுகின்றன? அவற்றின் மீது எவ்வளவு வரி விதிக்கப்படுகிறது? அதன்மூலம் வருமானம் என்ன? அரசாங்கத்தார் இது பற்றி என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறார்?" இவ்விதமாகக் கேட்கப்பட்டதற்குப் பின்வரும் பதில் அளிக்கப்பட்டது.

### பதில்

இறக்குமதி சம்பந்தமான அறிக்கை சமர்ப்பிக்கப் பட்டுளது. நொய்யரிசி மீது மணங்குக்குப் பன்னிரண்டு அணா தீர்வை விதிக்கப்பட்டிருக்கிறது. வருமானத்தைப் பற்றிய விவரங்களில்லை. நிலைமையை அரசாங்கத்தார் கவனித்து வருகிறார்.

## தொழிலாளர் பகுதி

### சிலோனில் இந்தியத் தொழிலாளர்

சிலோனில் முக்கியமாக மூன்று விதத் தொழிலை இந்தியாவிலிருந்து சென்ற தொழிலாளர் செய்கிறார். அவை தெற்பயிர், தேயிலை, ரப்பர் எடுத்தல் முதலியனவாகும். வேறு சிலர் தென்னந் தோட்டங்களிலும் வேலை செய்கிறார். தென்னந் தோப்புகளில் முக்கியமாக வேலை செய்பவர் சிங்களர்களே. சிலோனில் வேலை செய்யும் இந்தியத் தொழிலாளரை, எஸ்டேட்டுகளில் வேலை செய்பவர், வேறு இடங்களில் வேலை செய்பவர் என இருவகையினராகப் பிரித்தல் கூடும். 1934-ல் சிலோனின் ஜனத்தொகை 56,37,200. இதில் 8,00,000 பேர் இந்தியத்தொழிலாளர். இவர்களில் 6,85,700 பேர் எஸ்டேட்டுகளில் வேலை செய்வோர்.

—"இன்டர்நேஷனல் லேபர் ரெவ்யூ"

### நெட்டால் தொழிலாளர்

1935-ம் வருஷம் டிசம்பர் மாதக் கடைசியில் நெடாலில் 25,000 இந்தியத் தொழிலாளர் வேலைசெய்தனர். இதில் பெரும்பான்மையோர் சர்க்கரை, தேயிலை, நிலக்கரிச் சுரங்கம் முதலிய இடங்களிலேயே வேலை செய்தனர். சாப்பாடு, வைத்தியச்சிகிச்சை முதலியவைகளைத் தவிர மாதத்திற்கு 4½ பென்ஸ் (ஏறக் குறைய இரண்டரை ரூபாய்) ஒவ்வொருவருக்கும் கூலியாகத் தரப்பட்டது.

நிலக்கரிச் சுரங்கத்தில் 2253 பேர் வேலைசெய்தனர். அவர்களில் 615 பேர் ஆண்கள்; பெண்கள் 404 பேர்; 1234 பேர் சிறுவர். அவர்களுடைய கூலி எடை ஒன்றுக்கு 1½ பென்ஸ்முதல் 2½ பென்ஸ்வரை இருந்தது. உணவு முதலிய வசதிகள் இலவசமாக அளிக்கப்பட்டன.

—"லேபர் கெஜட்"

### எண்ணாயிரம் பேர் உண்ணா விரதம்

#### இரயில்வே தொழிலாளர் பட்டினி

காரக்பூரில் வங்காள-நாகபுரி இரயில்வே தொழிற்சாலையிலுள்ள தொழிலாளர், தமதுகருத்தைத் தெரிவித்தற் பொருட்டுத் தொழிற்சாலை ஏஜண்டையும், மெகானிகல் இஞ்சினியரையும் பேட்டியளிக்குமாறு கேட்டனர். அவர்கள் மறுத்ததால் எண்ணாயிரம் தொழிலாளர் உண்ணா விரதமிருக்கிறார். நிலைமை சாத்விகமாகவும் அமைதியாகவுமிருக்கிறது.

---

இங்கிலாந்தில் வேலை செய்வோர் இன்ஷியூர் செய்துகொள்ளுவது வழக்கம். 1936-ம் வருஷம் மே மாதத்தில் இன்ஷியூர் செய்யப்பட்டவர்களில் நூற்றுக்குப் பதின்மூன்று பேர் வேலையற்றிருந்தார். ஏப்ரல் மாத முடிவில் நூற்றுக்கு 13.8 பேர் வேலை இல்லாமலிருந்தார். 1935-ம் வருஷம் மே மாத முடிவில் 15.5 பேர் வேலையற்றிருந்தனர். அதனால் இன்ஷியூர் செய்து கொள்வோர் சீக்கிரத்தில் வேலையைப் பெறுகின்றனர் என்பது கொள்ளப்படுகிறது. சென்ற வருஷம் இன்ஷியூர் செய்து கொண்டவரின் தொகை 1,08,31,000. முந்திய வருஷத்தைவிட 4,72,000 பேர் அதிகமாகச் சென்ற ஆண்டில் இன்ஷியூர் செய்து கொண்டனர்.

## குளக்கரைப் பேச்சு

'அரசமரம்' சொல்வது

(கமலம்)

இன்று மாலை உபாத்தியாயர் சப்புராயர் குளக்கரைக்கு வந்தார்; வரும்பொழுதே கையில் ஒரு தினசரிப்பத்திரிகையும் கொண்டு வந்தார். குளக்கரையில் இராமஸ்வாமி சாஸ்திரியார் உட்கார்ந்து சாயங்கால ஜெபம் செய்து கொண்டிருந்தார்.

"இதைக் கேட்டீரா இராமஸ்வாமி சாஸ்திரியாரே!" என்றார் சப்புராயர்.

"என்ன! சொல்லுமே!" என்று ஜபமாலையை உருட்டிய வண்ணம் கேட்டார் சாஸ்திரியார். சப்புராயர் தினசரிப் பத்திரிகையைப் புரட்டிப் பின் வருமாறு படிக்கலானார்:

"கனம் ஹென்றி கிரெய்க் தலைமையில் சட்ட சபை அங்கத்தினர் தூதுக் கோஷ்டியொன்று அந்தமானைப்பார்வையிடச் செல்லும். திரு. ஹன்ஸிராஜ் அக்கோஷ்டி யருள் ஒருவராயிருப்பார். அக்டோபர் மாதம் ஒன்பதாந் தேதி அக் கோஷ்டியார் புறப்படுவர்.........." இச்சமயத்தில் முதலியாரும், உள்ளூர்க் கணக்கப் பிள்ளையும் வந்தனர்.

"சென்ற மேமாதத்தில் ஹென்றி கிரெய்க்அந்தமானுக்குப் போய்வந்தார். அவர் ஒன்றும் குற்றம் செய்யவுமில்லை. அதற்காக அந்தமானுக்குப் போகவுமில்லை. அவரது குற்றம் ஹோம் மெம்பராக இருப்பதே. அதனால் அந்தமானைப் பார்வையிடச் சென்றார். பார்த்து விட்டுத் திரும்பிவந்தார்.

"ஆகா! அந்தமான்! அதைப்பற்றிக் கூற ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷனாலும் முடியாதே. அது கைதிகளின் சுவர்க்க மல்லவா?" என்று அவர் புகழ்ந்தார். அதற்காக அவர் கூறவைப் பலர் கண்டித்தனர். 'கைதிகளின் சுவர்க்கமாகவிருந்தால் கனம் ஹோம் மெம்பர் அந்தமானுக்குப் போகட்டுமே! சட்ட சபையை அங்கு நடத்தட்டுமே!' என்று சிலர் கூக்குரலிட்டார். அவற்றை மனதிற் கொண்டு கனம் ஹென்றிகிரெய்க் சட்டசபை அங்கத்தவருடன் அந்தமானுக்குச் செல்கிறாரோ என்னமோ?" என்று ஒரு பிரசங்கமாரி பொழிந்தார் முதலியார்.

"முதலியார்வாள்! பாக்கியையும் கேளுங்கள்" என்று கூறி உபாத்தியார் மேலும் படித்தார்; 'பின்னர்வந்த செய்தி: கனம் ஹோம் மெம்பர் முன்பே ஒரு முறை அந்தமானுக்குப் போய்வந்துவிட்டபடியாலும், அந்தமானைப் பார்வையிடப் புறப்பட விருக்கும் கூட்டத்தில் உத்தியோகப் பற்றற்றவரே யிருத்தல் வேண்டுமாதலாலும், கனம் ஹென்றிகிரெய்க் அத்தூதுக் கோஷ்டிக்குத் தலைமை வகித்து நடத்திச் செல்ல மாட்டாரெனத் தெரிகிறது.'

"பேஷ்! ஹென்றி கிரெய்க் மகா நிபுணர். 'கொலை செய்தவர்கள் வசிக்கும் அந்தமானை நாம் ஆகாய மளாவப் புகழ்ந்தோமே. ஆனால் ஸின்ஹா அந்தமானுக்குச் செல்ல அனுமதி கேட்டபொழுது அவருக்குக் கொடாமல் திரு. செட்டியாருக்கு மாத்திரம் அனுமதியளித்தோமே. இப்பொழுது இந்தச்சட்டசபை அங்கத்தவர் நம்மைக் கட்டிபிழுக்கிறாரே என்ன செய்வது? ஒருகால் நாம் சொல்லியபடி அந்தமான் சுவர்க்கமாக இல்லாவிட்டால் என்ன செய்வது? இந்தச்சட்டசபைக் குழந்தைகள் பொல்லாதனவே! சுவர்க்கம் எங்கே? என்று கேட்டால் விழிக்க நேருமே' என்று அவர் யோசித்திருப்பார். அவரது மூளைக்கா யுக்தி தோன்றாது! உடனே ஒருயுக்தி தோன்றிற்று. 'ஆகா ஒருவன் சும்மா சும்மா சுவர்க்கம் செல்வானா? ஒருதரமே செல்லலாம். நீங்கள் போய்வாருங்கள்,' என்று நல்ல பிள்ளைத் தனமாகக் கூறிவிட்டார்" என்று ஒருபோடு போட்டார் சாஸ்திரியார்.

மேலும் சப்புராயர் படித்தார். "ஸ்ரீ வைகுண்டம் பிராசஸ்லர்வர் சங்கத்தினர் ஒரு கூட்டம் கூடி எட்டாவது எட்வர்டு சக்கரவர்த்திக்கு ஏற்பட்ட ஆபத்து தெய்வாதீனமாக விலகினமைபற்றிச் சந்தோஷிப்பதாகவும் சக்கரவர்த்தி நீடூழிவாழக் கடவுளை வேண்டுவதாகவும் ஒரு தீர்மானம் நிறை வேற்றினர்."

"ஆமாம்! இதென்ன அர்த்தமில்லாத காரியம்! எந்த இடத்தில் என்ன கூட்டம் நடந்தாலும்சரி போனயுகத்தில் நடந்த துக்கத்துக்கு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் படுகிறதே!" என்றார் முதலியார்.

"எட்வர்ட் சக்கரவர்த்திக்கு ஆபத்து நேர்ந்தசெய்தி ஸ்ரீ வைகுண்டத்துக்கு எட்டுவதற்கு இத்தனைநாட்கள் சென்றன போலும்! என்றார் சப்புராயர்.

"கோரக்பூர் ஜில்லாவில் வெள்ளத்தால் கஷ்டப்படுவோருக்கு இந்தியத் தேயிலைச் சுங்கக் கமிட்டியார் இலவசமாகத் தேநீர் அளிக்கிறார்" என்றார் கணக்கப்பிள்ளை.

"பசியால்வாடும் மக்களுக்கு ஆரோக்கியமும் சுறுசுறுப்பும் அளிக்கவே இக்காரியம் நடைபெறுகிறது போலும்" என்றார் முதலியார்.

"நமது ஊரிலே தேநீர் அருந்தியிராதவர் வீணாக நாக்கில் ஜலம் சொட்ட நிற்கவேண்டியதில்லை. நேராக வடக்கே போய் வெள்ளத்தில் நனைந்தால் தேயிலைக்கமிட்டியார் ஓடிவந்து தேநீர் அளிப்பர்" என்றார் சாஸ்திரியார்.

'வெளிநாடுகளுக்கு இந்தியக் குரங்குகள்' என்ற தலைப்பை வாசித்தார் உபாத்தியார்.

"என்ன ஐயா! அதைவாசியும்" என்றார் கணக்கப்பிள்ளை.

"இந்தியா சட்டசபையில் பண்டித கிருஷ்ணகாந்த மாளவியா கேள்விக்கு அரசாங்கத்தார் பதிலளிக்கையில் '1935-36-ம் வருஷத்தில் இந்தியாவிலிருந்து ஐக்கியநாடு, சிங்கப்பூர், பெல்ஜியம், ஜெர்மனி, இங்கிலாந்து முதலிய நாடுகளுக்கு ஏராளமான குரங்குகள் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் என்ன நோக்கத்துடன் இக் குரங்குகள் அந்த நாடுகளில் இறக்குமதி செய்யப்பட்டிருக்கின்றனவென அரசாங்கத்துக்குத் தகவல் கிடைக்கவில்லை' என்று அறிவிக்கப்பட்டது." இவ்விதம் சப்புராயர் படித்தார்.

"பூ! இது தெரியாதா! வெளி நாட்டாருக்கு இந்தியப் பொருள்களிடத்தில் பிரியமதிகம். நமது நாட்டிலிருந்து போனவை போக பாக்கியிருப்பன குரங்குகளே! அவற்றையாவது அடையலாமென்று அவர்கள் இறக்குமதி செய்திருப்பார்கள்" என்றார் சப்புராயர்.

### 'சிறுவரை அடியாதே'

நாங்கிங் கல்வி மந்திரியார் சீனப் பள்ளிக்கூடங் களிலுள்ள சிறுவர்களுக்குத்தண்டனை விதித்தல் கூடாதென அறிக்கை பிறப்பித்துள்ளார். கையாலோ, பிரம்பினாலோ, ரூல்கழியாலோ சிறுவர்களை அடித்தல் கண்டிப்பாக நிறுத்தப்படல் வேண்டுமென்றும், சிறுவர்களை அடிப்பதால், அவர்கள் சுதந்திரத்துக்கும், அறிவு அபிவிருத்திக்கும் பாதகம் ஏற்படுகிறதென்றும் அவ்வறிக்கை கூறுகிறது. அவ்விதம் சிறுவர் தண்டிக்கப்பட்டால் உபாத்தியாயர்மீது கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமாம்.

## மாதர் பகுதி

### பெண்கள் சமத்துவம் ஓங்குக

#### ஒழுக்கத்தின் உயர்வு

சென்றசனிக்கிழமையன்று சென்னைச் சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழா நடை பெற்றது. பகாமகோபாத்யாய வித்யா வாகஸ்பதி எஸ். குப்புசாமி சாஸ்திரியார் பட்டமளிப்பு விழாப்பிரசங்கம் செய்தார். தமது பிரசங்கத்திடையே பெண்மக்களைப்பற்றி அவர் குறிப்பிட்டதன் சாரம் வருமாறு:—

"பெண்கள் ஆண்களுடன் எல்லாத் துறைகளிலும் போட்டி யிடலாம். ஆணுக்கொரு சட்டமும் பெண்ணுக்கொரு நீதியுமாக விருப்பதை எதிர்த்துப் போரிடப் பெண்களுக்கு உரிமையுண்டு. மூடப்பழக்கங்கள் நம் நாட்டில் எவ்விதமாகவோ நுழைந்துவிட்டன. கல்வியறிவில்லாத தங்கள் சகோதரிகளுக்குக் கல்வி போதித்தல் கற்ற பெண்களது கடமை. பொதுவாழ்வில் தங்களுக்கு எவ்வளவு புகழிருந்தபோதிலும், எவ்வளவுதூரம் படித்திருந்தாலும் ஒழுக்கம் உயர்ந்ததாயிருத்தல் அவசியமென்பதைப் பெண்கள் கருத்திற் கொள்வார்களாக. நம் நாட்டிற்குக் குடும்ப வாழ்வே சிறந்ததென்று வகுக்கப் பட்டுளது. இக்குடும்ப வாழ்விலேயே நம் நாட்டு நாகரிகம் வளரும். அதற்காகவே கலியாணம் என்ற பந்தம் விதிக்கப்பட்டுளது. கலியாணம் செய்துகொண்டு குடும்பம் நடத்தும் பெண்களுக்குக்'கிரஹிணி' அதாவது வீட்டின் அரசி என்று பெயர். ஆகவே பெண்கள் குடும்ப வாழ்வை நிராகரித்தல் கூடாது. தற்காலக் கல்வியின் பயனை ஆணும் பெண்ணும் குடும்ப வாழ்வை அவமதித்து ஒதுக்குவரேல் அந்நாள் நம் நாகரிகத்துக்குப் பொல்லாத நாளாகும்.

படித்துப்பட்டம் பெற்ற பெண்மணிகள் மேற்கு நாட்டவர் நாகரிகத்தை அப்படியே பின்பற்றுதல் கூடாது; மைத்ரேயி, தமயந்தி, சீதை, சாவித்திரி, சுகன்யை முதலியவர் போன்ற சிறந்த பெண்மணிகளாகத் திகழ்தல் வேண்டும்.

பெண்கள்சமூகம் முன்னேறுதல் வேண்டுமானால், அன்னி பெஸண்டு கூறியதுபோல 'அர்த்த நாரீசுவர' உருவத்திலிருந்து உணர்ச்சியை அடையட்டும். பெண்ணுக்கும் ஆணுக்கும் உள்ள தொடர்பு, கலைக்கும் விஞ்ஞானத்துக்கும் உள்ள தொடர்பு போன்றது; பேச்சுக்கும் நினைவுக்கும் உள்ள சம்பந்தத்தை ஒத்தது; அழகுக்கும் புகழ்ச்சிக்கும் உள்ள உறவை நிகர்த்தது. 'அர்த்தநாரீசுவர' உருவத்தின் அறிகுறியானது நம் நாட்டுப் பெண்மணிகளின் உயர்ந்த ஒழுக்கத்தையும், புகழ்ச்சியையும் காத்தருள்க!"

### சீனனின் விநோதப் பழக்கம்

சீனநாட்டினன் ஒருவன் தனதுநண்பனைச் சந்திக்கும் பொழுது அவனது கையைப் பிடித்துக் குலுக்குவதற்குப் பதிலாகத் தன் கையையே குலுக்கிக் கொள்வது வழக்கம். ஒரு புஸ்தகத்தைப் படிக்க ஆரம்பித்தால் அவன் கடைசிப் பக்கத்திலிருந்து தொடங்கி ஆரம்பத்தில் கொண்டுவந்து முடிக்கிறான். துக்ககரமான பாடல்களைக் கேட்கும் பொழுது அவன் சிரிக்கிறான்; விநோதப் பாடல்களைக் கேட்டு அழுகிறான். அவன் பிறர் வீட்டுக்குள் நுழையும் பொழுது தொப்பியைத் தலையில் வைத்துக் கொள்கிறான்; வெளியே செல்லும்பொழுது தொப்பியைக் கையில் எடுத்துக் கொள்கிறான்.



## மணித்திரள்

ஜாம்னி என்ற நகரில் ஒரு மாது ஒரே காலத்தில் நான்கு குழந்தைகளைப் பெற்றாள். அவற்றில் மூன்று உயிரோடிருக்கின்றன.

*

அமெரிக்காவில் ரினோ என்பது ஒரு நகரம். அந்நகரத்தில் இவ்வாண்டு 3681 விவாகங்களும் 1520 விவாகரத்துக்களும் நடைபெற்றனவாம்.

*

அமெரிக்காவிலுள்ள ராபெர்ட் பெர்ஷிங் வாட்லோ என்பவரே உலகத்திலுள்ள அதிக உயரமான மனிதர். அவர் எட்டடி உயர மிருக்கிறார். எடை 425 பவுன்.

*

சர்வதேச சங்கம், இருபது லக்ஷம் பவுன் செலவில் கட்டப்பட்ட கட்டடத்தில் சினிமா ஒன்றை நடத்துகிறது. சங்க விஷயமான படங்களே இங்குக் காட்டப்படுமாம்.

*

முப்பதுவருஷ முயற்சியால் ரான்சியில் உபாத்தியாயராக இருக்கும் சாமுவேல் ரங்கா என்பவர் உரயான் பாஷைக்குப் புதிய வரி வடிவங்களைக் கண்டு பிடித்திருக்கிறாராம்.

*

ஜெர்மெனியில் நடந்த ஒலிம்பிக் ஓட்டப்பந்தயத்தில் சில நீக்ரோவர் வெற்றி பெற்றனர். தொடையில் ஆபரேஷன் செய்து கொண்டதாலேயே அவர் வேகமாக ஓட முடிந்ததெனக் கூறுகிறார்.

*

உடன்கட்டை யேறும் வழக்கம் இன்னும் இந்தியாவை விட்டு அகலவில்லை. அம்பா என்ற நகரில் உடன் கட்டை ஏறினதற்காக இரண்டு தாகூர் சிறைசெய்யப்பட் டிருக்கின்றனர்.

*

ஜப்பானிலுள்ள டோக்யோ நகரில் உதயசூரியன் வடிவாக உள்ள ஒரு தேசியக் கொடி மனிதனுடைய மயிரால் செய்யப்பட்டிருக்கிறது. இக் கொடிக்கு 800 ஜப்பானியர் மயிர் உதவினராம்.

*

கோடைக் காலத்தில் பன்றிகளைக் குளிர்நீரில் குளிப்பாட்டினால் அவை கொழுத்து வளர்கின்றனவாம். இதற்காக ஆஸ்திரேலியாவிலுள்ள நியூ சௌத் வேல்ஸ் என்ற நாட்டில் குளிர்ந்த நீர் ஸ்நானக் கட்டங்கள் கட்டப்பட்டிருக்கின்றன.

*

தேனீப் பூச்சிகளுக்கு உஷ்ணம் உண்டாக்கும் தன்மை இருக்கிறதென்று அமெரிக்காவிலுள்ள பிரௌன் சர்வகலாசாலையைச் சேர்ந்த ஐவான் ஆர். டெய்லர் என்ற அறிஞர் கூறுகிறார். நான்கு தேனீப் பூச்சிகள் ஏழரை நாளில் ஒரு 'திம்பிள்' ஜலத்தைக் கொதிக்கச் செய்கின்றன.

*

புதிய மோட்டார் வண்டிகளைச் செய்வதற்காக மூன்று கோடியே எழுபது லக்ஷம் ஸ்டார்லிங் செலவில் அமெரிக்காவிலுள்ள ஹென்றி போர்டு ஒரு புதிய இயந்திரத்தை அமைத்திருக்கிறார். இது மூன்று லக்ஷத்து இருபத்தாறுயிரம் குதிரை ஒட்டமுள்ளது. உலகத்திலேயே இது பெரிய இயந்திரமாகும்.

---

பம்பாய் நகர சபையார் நகரசபை உத்தியோகஸ்தர் எவருக்கும் முப்பது ரூபாய்க்குக் குறைந்த சம்பளம் அளித்தல் கூடாதெனத் தீர்மானித்திருக்கிறார். ஐந்நூறு ரூபாய்க்கு மேற்பட்டு எவருக்கும் சம்பளம் அளித்தல் கூடாதென ஒரு பிரேரணை ஆலோசனைக்கு வந்தது. ஆனால் வேரோர் அங்கத்தவர் சுயராஜ்யம் வருமளவும் அந்தப் பிரேரணையை ஒத்திவைக்குமாறு ஒருதிருத்தம் கொண்டுவந்தார். சுயராஜ்யம்வரும்வரை பிரேரணை ஒத்தி வைக்கப் பட்டுளது.

## உலகக் காட்சி

### டொபோகன் மோட்டார் வண்டி

மோட்டார் வண்டிகள் தோன்றியதும் பழைய குதிரை வண்டிகளும் மாட்டுவண்டிகளும் பெரிதும் மறைந்தன. முதல் முதல் வந்த மோட்டார் வண்டியைப் பார்க்க இப்போது சிலர் வெறுப்பர். என்? வருஷந்தோறும் புதுப் புது வகையான வண்டிகள் பலதிறப்பட்ட அமைப்புக்களில் தோன்றுகின்றன. தற்போது கலிபோர்னியாவில் ஒரு புதிய மோட்டார் வண்டி கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. மோட்டார் சைகில் என்ஜினாலேயே அது ஓட்டப்படுகிறது. அதில் நான்கு முதல் ஆறுபிரயாணிகள் வரை உட்காருதல்கூடும். ஆனால் தற்போது உட்காருவது போல பக்கமார்க்கமாக உட்காரஇயலாது. முதலில் ஓட்டுபவர் இருப்பார். அவர்க்குப் பின்னர் வரிசையாக மற்றவர் இருப்பர். அவ்வண்டியில் அலுமினியப் பிடிகள் இருக்கின்றன. வண்டி ஓடும்போது உட்கார்ந்துகொண்டிருப்பவர் பிடித்துக் கொள்ள அவைகள் உதவுகின்றன. ஆகாய விமான வடிவினதாக இம்மோட்டார் வண்டி இருக்கிறது. குழுக்களில் இரண்டு சக்கரங்களுக்கும் இடைப்பட்ட தூரம் ஆறு அடி. வண்டியின் நீளம் மட்டும் பதினேழடி. இவ்வண்டியில் இரண்டே 'சிலிண்டர்' உள்ள என்ஜின் இருக்கிறது. அதுவும் பின்புறச் சக்கரத்துக்கு அருகில் இருக்கிறது. என்ஜினுக்கும் பின்புறச் சக்கரத்துக்கும் இடையில் ரப்பர் பட்டை ஒன்று இருக்கிறது. இந்தப் பட்டையின் பலத்தாலேயே சக்கரம் சுழல்கிறது. மணிக்குத் தொண்ணூறு மைல் வேகத்தில் இந்த மோட்டார் வண்டி ஓடுகிறது. மிகக் குறுகிய வளைவுகளில் வேகமாக ஓடும் வண்டி ஒரு புறமாகத் தூக்கி எறியப்படுமல்லவா? அவ்வாறு எறியப்படாதபடி தடுக்க இம்மோட்டார்வண்டியின் பக்கங்களில் அநேக சிறியசக்கரங்கள் இருக்கின்றன.

*

### பதினறு அங்குல தேரை

உலகத்திலுள்ள பெரிய தேரையொன்று நியூயார்க் நகரத்திற்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அமெரிக்க உயிர்வர்க்க ஆராய்ச்சியாளர் இப்போது இதுபற்றிய ஆராய்ச்சிகளைச் செய்து வருகின்றனர். அது புபோமாரிமஸ் என்ற தேரைக் குடும்பத்தைச்சேர்ந்ததாகும். இப்பெரிய தேரை பதினறு அங்குல நீளமிருக்கிறது.

*

### செவிட்டு எஜமானருக்கு உதவும் நாய்கள்

நாய்களின் அறிவு வரவர அதிகமாகிக் கொண்டே வருகின்றது. ஜெர்மெனியிலுள்ள சில இடையருடைய நாய்கள் செவிட்டு எஜமானருக்கு உதவும் முறையில் பழக்கப்படுகின்றன. சில நாய்கள் மணி அடிப்பதை மிகக் கவனத்தோடு கேட்கின்றன; தம் எஜமானரை அவ்விடங்களுக்கு அழைத்துச் செல்கின்றன. சில எஜமானர் பாதிச்செவிடராக இருக்கிறார். டெலிபோனில் யாராவது கூப்பிடும்போது இந்நாய்கள் டெலிபோன் அருகே சென்று கேட்கும் கருவியை எடுக்கின்றனவாம். யாரோ கூப்பிடுகிறார் என்பதை யறிந்து உடனே எஜமானர் டெலிபோனருகே செல்கிறார்.

*

### திருடர்களைப் பிடிக்க இயந்திரங்கள்

உலகத்தில் வரவரத் திருடர் அதிகமாகின்றனர். இவர்களுக்கு உத்வியாக இப்போது மோட்டார் வண்டிகளும் வந்து சேர்ந்தன. திருடிவிட்டு, போலீஸார் வருவதற்குள் மோட்டாரிலேறித் திருடர் சென்றுவிட்டனர் என்று நாம் பல தடவைகளில் கேட்டிருக்கிறோம். மோட்டாரில் செல்லும் திருடரைப் பிடித்தல் மிகக் கடினம். இக் குறையைப்போக்கவே இப்போது ஒரு புதிய இயந்திரம் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. போலீஸ் மோட்டாரின் முன்பாகத்தில் ஒருவிதக் கருவி இணைக்கப்பட்டிருக்கிறது. இக்கருவி தூரதிருஷ்டிக் கண்ணாடியின் கம்பிகளாலானது. இக் கருவியின் மூலமாகத் திருடரையும், அவர் ஏறிச்செல்லும்மோட்டார் வண்டிகளையும் வெகு சுலபமாகப் பிடித்தல் கூடும். சுமார் ஆறு அடி தூரத்தில் திருட்டு மோட்டார் செல்லும் போது ஒரு பொத்தானை அழுத்தினால் அந்த மோட்டாரை இக்கருவி பிடித்துக் கொள்ளுகிறது. உடனே போலீஸ் மோட்டார் நிறுத்தப்பட்டால் திருடர் ஏறிச் செல்லும் மோட்டாரும் நிறுத்தப் படுகிறது.

* * *

### காப்பி மருந்து

காப்பிக் கொட்டையில் 'காபின்' என்ற ஒரு சத்து இருப்பதைப் பலர் அறிவர். இப்பொருளே உடல் நலனுக்குத் தீங்கு விளைவிக்கிறதெனச் சொல்லப்படுகிறது. அதனாலேயே காப்பிக்குடியும் வெறுக்கப்படுகிறது. ஆனால் இந்த 'காபின்' என்ற பொருள் உடலுக்கு நலனைத்தருகிறதென ஹாலிங்ஸ்வொர்த் என்ற அமெரிக்க அறிஞர் ஒருவர் கண்டு பிடித்திருக்கிறார். அவர் காப்பிக்குடியைப்பற்றி எழுபத்தாறுயிரம் ஆராய்ச்சிகள் செய்தனர். முடிவில் காப்பிக்குடி உடலுக்குத் தீமையை விளைப்பதில்லையென்ற முடிவுக்குவந்தார். உடல்தசைகளுக்குக் காப்பி அதிக பலத்தைத் தருகிறது. இது டானிக்கைப்போல உதவுகிறது. இக்குடி மூளையையும் அதிக வேலை செய்யும்படி தூண்டுகிறதாம்.

* *

### நெருப்புக்கு அஞ்சா ஆகாய விமானங்கள்

சமீபத்தில் சில ஆகாய விமானங்கள் தவறிக் கடலிலோ அல்லது பூமியிலோ விழுந்துவிட்டனவென நாம் கேள்விப்பட்டோம். இதற்குக் காரணமென்ன? அவ்வாகாய விமானங்களிலுள்ள என்ஜின்கள் கெட்டுப் போவதாகும்; சில சமயங்களில் ஆகாய விமானங்கள் தீக்கிரையாவதுமாம். இவ்வபாயங்களைநீக்க ஆகாய விமானங்களில் தற்போது சில புதிய வசதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ஒவ்வோர் ஆகாயவிமானத்திலும் நெருப்பை அணைக்கும் கருவிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை "தெர்மோஸ்டாட்ஸி"னால் இயக்கப்படுகின்றன. குறிப்பிட்ட அளவுக்குமேல் உஷ்ணமானால் இவை தாமாகவே இயங்குகின்றன. அதனால் நெருப்பு உண்டாவதற்கே இடமில்லாமல் போகிறது. பெட்ரோல் 'டாங்க்' முதல் பிரயாணிகள் உட்காரும் இடம்வரை இக் கருவிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அதனால் ஆகாயவிமானங்களில் இனி நெருப்பு அண்டாது.

*

### விரல்கள் கேட்கின்றன

காதுகளால் கேட்கமுடியாத சில சப்தங்களைக் கைவிரல்களால் கேட்கக்கூடுமென அமெரிக்காவிலுள்ள வடமேற்குச் சர்வகலாசாலை விஞ்ஞான சாஸ்திரி ஒருவர் கண்டுபிடித்திருக்கிறார்; அதிக சக்தியுள்ள சப்தங்களைக் குறைந்த சக்தியுள்ளவைகளாக மாற்றுதல் கூடுமென அவர் கூறுகின்றார்; இப்படி மாற்றப்பட்ட சப்தங்களை மின்சாரக் கதிர்களின் உதவியால் கைவிரல்களின் நுனிகள் மூலமாக அறிதல் கூடுமெனவும் தெரிவிக்கிறார். இம்முறையால் செவிடரும் கேட்க ஒரு வசதியைப் பெறுகின்றனர்.

## உதிர்ந்த மலர்கள்

"சமாதானத்தையும், அன்பையும் உலகுக்குப் போதிக்கக் கடவுள் மகாத்மா காந்தியைத் தெரிந்தெடுத்துளார். ஆனால் மகாத்மாவின் கொள்கைகளைப் பின்பற்றுவோரில் பலரிடம், உண்மையும், அன்பும் குறைந்து காணப்படுவது வருந்தத் தக்கதே."

—ரெவரெண்டு. ராலாராம்

*

"பள்ளிக்கூடங்களில் மாணவர்க்குப் பரீட்சை நடத்துவது தீது. இதனால் மாணவர்க்கும், உபாத்தியாயருக்கும் விளையும் தொல்லைகள் அநேகம்."

—ராவ் சாகிபு. வி. சின்னப்பா

*

"பொருளாதார, சமூக சீர்திருத்தமும், கல்விச்சீர்திருத்தமும், ஒத்தமுறையில் நடை பெறல் வேண்டும். பொருளாதார, சமூகச் சீர்திருத்தத்தில் கவனம் செலுத்தாது கல்வித் திருத்தத்தில் மாத்திரம் கருத்துக் கொள்ளல் வெற்றி யளியாது."

—எம். கே. ஸ்ரீநாவிம்மய்யா

*

"உபாத்தியாயர்கள் மிகுந்த அறிவாளிகள் என்றும், மரியாதைக்குரியவர்கள் என்றும் சமீபகாலம்வரை மக்களால் கௌரவிக்கப்பட்டு வந்தார்கள். கிராமங்களில் உபாத்தியாயர்களே, கிராமத்தவரின் நண்பர்களாகவும், வேதாந்திகளாகவும், ஆலோசனை கூறுபவர்களாகவும் கருதப்பட்டார்கள். தற்காலம் ஸ்தலஸ்தாபனங் களிலுள்ளவர் உபாத்தியாயர்களை இழிவாக நினைக்கிறார்; ஏதோ தாம் அளிக்கும் சம்பளத்துக்கு உழைக்கும் தொழிலாளியெனமதிக்கிறார்; தமக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தரென எண்ணுகிறார்; உபாத்தியாயரை அடக்கியாளத் தமக்கு உரிமையுண் டென்று கருதுகிறார். பொறுப்பும், மதிப்பும் வாய்ந்த நிலையிலிருந்து, தினசரிக் கூலி பெற்றுப் பிழைக்கும் கூலிக்காரன் ஸ்திதிக்கு உபாத்தியாயர் ஸ்தானம் மாறியது. ஆகவே உபாத்தியாயர்கள் ஒன்றுபட வேண்டுதல் இன்றியமையாதது. உபாத்தியாயினியர் விலகியிருத்தல் கூடாது. அவர்களும் உபாத்தியாயர்களுடன் சேர்ந்து உபாத்திமார் சங்கத்தின் வலிமைக்கு வழி தேடல் அவசியம்."

—எஸ். கே. யக்ஞநாராயண அய்யர்

*

"உங்களது விளையாட்டுச் சங்கத்தினின்றும் விலகாதீர்கள். அதிலிருந்து கொண்டே தேச பக்தியை வளருங்கள்."

—டாக்டர். சுப்பராயன்

*

"இந்தியாவின் சுதந்திரத்துக்காகப் போராடும் ஸ்தாபனம் காங்கரஸ். மக்கள் காங்கரஸில் சேர்ந்து தேர்தலில் காங்கரஸ் அபேட்சகர்களுக்கே தங்கள் வாக்கை அளிப்பார்களென நான் நம்புகிறேன்."

—சர்தார் படேல்

*

"இரயில்வே நிர்வாகத்தில் அனுபவம் வாய்ந்தவர் இந்தியாவிலிருக்கிறார். இதற்காக இங்கிலாந்திலிருந்து நிபுணர்களை அழைத்தல் வேண்டாம். அந்நாட்டு வேலை முறைக்கும் நம்நாட்டு வேலை முறைக்கும் வித்தியாசமுண்டு. அந்நாட்டில் சம்பளமும் அதிகம்."

—பிர்லா

*

"நாம் அடிமைத் தனையால் கட்டுண்டிருக்கிறோம். ஜனநாயகத்தைப் பாதுகாக்கும் பொருட்டு ஸ்பெயின் போராடுகிறது. அத்தினத்தை நாம் கொண்டாடி, ஸ்பெயினிடத்து அனுதாபம் காட்ட நமக்கு உரிமையுண்டு. அது இன்னும் நம்மிட மிருந்து பிடுங்கப்படவில்லை. தற்சமயம் நமது கருத்துக்கள் உபயோக மற்றவையாயிருத்தல் கூடும். ஆனால் உலகத்தவர் இந்தியாவின் கருத்தை மதிக்கும் காலமும் வரும்."

—சரோஜினி நாயுடு

எங்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற் கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1936ஆ செப்டம்பர்மீ 4௨

## தேர்தல்

இப்பொழுது வழங்கப்பெற்றுள்ள புதுச் சீர்திருத்த முறைப்படி அமையப் போகுஞ் சட்ட சபைத் தேர்தல் முயற்சி ஆங்காங்கே தொடங்கப்பட்டு வருகிறது. பம்பாயில் கூடிய காங்கரஸ் காரியக்கூட்டம் அத்தேர்தலைப் பற்றிய ஓர் அறிக்கை வெளியிட்டதைக் குறித்துச் சென்ற வாரம் சுருங்கக் கூறினோம்.

காங்கரஸ், சட்டசபையில் நுழையத் தீர்மானித்துவிட்டது. ஆனால் பதவி ஏற்றல் ஏலாமையைப் பற்றி இன்னுங் காங்கரஸ் மூச்சு விடவில்லை. தேர்தல் முற்றுப்பெற்ற பின்னைப் பதவி ஏற்றல் ஏலாமையைக் குறித்து ஒருவித முடிவு செய்யலாம் என்பது காங்கரஸ் கருத்து.

காங்கரஸின் மௌனம் பதவி ஏற்றலை யுணர்த்துவது என்று ஊகிக்கலாம். காங்கரஸ் பதவி ஏற்றலுக்கும் மற்றக் கட்சிகள் பதவி ஏற்றலுக்கும் வித்தியாசமுண்டு. காங்கரஸ் அறிக்கையில் 'ஒத்துழைப்பை முன்னிட்டுக் காங்கரஸ் சட்டசபையைப் பற்றப்போவதில்லை' என்னுங் குறிப்புத் திகழ்ந்துகொண் டிருக்கிறது. இதனால் காங்கரஸ் பதவி ஏற்பினும் அதனடியில் போராட்டமிருக்கும் என்பது நன்கு விளங்குகிறது. போராட்டத்தின் பொருட்டே காங்கரஸ் பதவி யேற்குமென்னுங் கருத்துப்படச் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் ஏறக்குறைய ஒரு திங்கட்கு முன்னர்ச் சென்னைக் காங்கரஸ் மண்டபத்தில் பேசினர். அக்கருத்தை அப்பொழுதே நாம் போற்றி யெழுதியது நேயர்களுக்கு நினைவிருக்கலாம்.

'போராட்டம்' என்பதை எந்நேரமும் போராட்டம் என்று கொள்ளுதல் கூடாது. சமயம் நேரும்போது போராட்டம் எழுப்புவதே தேசத்துக்கு நலம் விளைப்பதாகும். சட்டசபை வாயிலாகவும் தேசத்துக்குச் சில வழியில் நலஞ் செய்யலாம். எவ்வழியிலாதல் தேசத்துக்கு நலஞ் செய்தல் நோக்கமா யிருத்தல் வேண்டும்.

நமது மாகாணத்தைப் பொறுத்த வரையில் தேர்தல் பிரசாரத்தில் சில விடயங்களைச் சிறப்பாகச் சேர்த்துக் கொள்வது நலம். அவைகளில் மூன்று இங்கே குறிக்கத்தக்கன. ஒன்று ஜில்லா போர்டுகளைக் கலைத்தல்; மற்றொன்று ஹிந்துமத தர்ம பரிபாலன அமைப்பைக் கலைத்தல்; இன்னொன்று உத்தியோகத் தெரிந்தெடுப்பு அமைப்பைக் கலைத்தல். இவைகளைத் தேர்தல் பிரசாரத்தில் சேர்த்துக்கொள்ள நமது மாகாணத் தொடர்பு கொண்ட-ஆந்தர - தமிழ்-கேரள காங்கரஸ் கூட்டம் இசைதல் வேண்டும். இதற்கென மூன்று நாட்டுக் காங்கரஸும் ஒன்று சேர்ந்து ஒரு மகா நாட்டைக் கூட்டி ஒருவித முடிவுக்கு வருதல் நல்லது.

ஜில்லா போர்டுகளின் நடைமுறை நன்று யில்லை என்னுங் கூக்குரல் எங்கணும் எழும்பியிருக்கிறது. ஜில்லா போர்டு தேர்தலில் நிகழும் ஊழல்களுக்கோர் அளவில்லை. ஜில்லா போர்டு தலைவர்களின் அட்டூழியங்கள் பலபடச் சொல்லப்படுகின்றன. ஜில்லா போர்டு ஆசிரியன்மார்களை - சிறப்பாகப் பெண் ஆசிரியன்மார்களை - அந்தரங்கமாக விசாரித்தால் பல உண்மைகள் வெளிவரும்.

எல்லாத் தொழில்களிலும் விழுமியது ஆசிரியத் தொழிலேயாகும். ஆசிரியன்மாருள் ஆரம்ப ஆசிரியர் பொறுப்பு மிகப் பெரிது. உலகம் அவர்களிடம் ஒப்புவிக்கப் படுகிறது என்று கூறல் மிகையாகாது. அத்தகைப் பொறுப்பு வாய்ந்த ஆரம்ப ஆசிரியன்மார், ஜில்லா போர்டு தலைவர்களிடம் படும்பாட்டை என்னென்று கூறுவது? அவர்கள் பல வழியிலும் இடர்ப்படுகிறார்கள். ஜில்லா போர்டு கட்டினின்றும் ஆசிரியன்மார்கள் விடுதலை யடைந்தால், அவர்கள் அச்சமின்றி உரிமை யுணர்வுடன் தொழில் புரிவார்கள். இதுபற்றிச் சமயம் நேர்ந்துழி விரித்துக் கூறுவோம்.

ஹிந்து தர்ம பரிபாலன அமைப்பால் விளையும் நலன் மிகச் சிறிது; தீமை பெரிது. கமிஷனர்களுக்கு ஆகம சாஸ்திர உணர்வு இருத்தல்வேண்டுமென்பது சட்டத்திலில்லை. ஆகம சாஸ்திரங்களுண்டு என்னும் உணர்வு மில்லாதவரும் கமிஷனராக வரலாம். ஆகம சாஸ்திர நிலையங்கள் அவர்கள் பார்வையில் விடப்பட்டிருக்கின்றன. கோயில்கள் பக்தி மார்க்கத்துக்கென ஏற்பட்டவை. அவைகள் இப்பொழுது வெறும் கணக்குக் கூடங்களாக மாறிவருகின்றன. கோயில் சொத்துகளைத் தேசிய மயமாக்கிவிட்டால் பரிபாலன அமைப்பு வேண்டுவதில்லை. இது பற்றியும் சமயம் நேர்ந்துழி விரித்து எழுதுவோம்.

உத்தியோகத் தெரிந்தெடுப்பு அமைப்பால் இளைஞர் துயர் நீங்கவில்லை என்பது வெள்ளிடைமலை. அவ்வமைப்புக்கென உள்ள உத்தியோகஸ்தர் சம்பளச் செலவு வீணேயாகும். ஆதலால் அவ்வமைப்பு முற்றிலும் அநாவசியம்.

நமது மாகாணத்தைப் பொறுத்தவரைக் காங்கரஸ் இம்மூன்று விஷயங்களையுந் தேர்தல் பிரசாரத்தில் சேர்த்துக்கொண்டால் பெரும்பயன் விளைவது திண்ணம். இம் மூன்றுக்கும் பொதுஜன அபிப்பிராயம் சாதகமாகவே கிடைக்கும் என்று நம்புகிறோம்.

## ருஷ்யாவின் நிலை

முன்னே ஐரோப்பாவில் நடைபெற்ற மகா யுத்தத்தின் போது ருஷ்யாவில் ஒரு பெரும் புரட்சி நிகழ்ந்தது. அதன் பயனாக அங்கே பொது உடைமை ஆட்சி வீறிட் டெழலாயிற்று. அங்கே புரட்சியை எழுப்பவும், பொது உடைமை ஆட்சியை அமைக்கவும் துணை நின்றவர் பலர். அவருள் குறிக்கத்தக்கவர் லெனின், டிராட்ஸ்கி, ஸ்டாலின் முதலியோர்.

பொது உடைமைக் கொள்கைகள் பலதிறத்தன. அவைகளுள் சில நமது கருத்துக்கு அரண் செய்வன; சில முரண்செய்வன. அரண் முரண்களைப் பற்றிய ஆராய்ச்சி ஈண்டைக்கு வேண்டுவதில்லை. நியாய முறையில் அக்கட்சி ருஷ்யாவில் நிலவும் விதத்தையே ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம்.

'பொதுஉடைமை' என்பது சாதி மதம் தேசம் முதலிய கட்டுகளை உடையதன்று. அஃது அகிலத்துக்கும் பொதுவானது. அக்கொள்கையுடைய கூட்டத்தார் அதை உலகுக்குப் பிரசாரஞ் செய்யவேண்டு மென்பது அதன் தத்துவம். லெனின் அவ்வெண்ணத்துடன் பொதுஉடைமை ஆட்சியை ருஷ்யாவில் நடாத்தி வந்தார்.

லெனின் இறந்தபின்னை ஸ்டாலின் ருஷ்யத் தலைவரானார். உலகப் பிரசாரத்தை நிறுத்த வேண்டு மென்பதும், ருஷ்யா அளவில் பொது உடைமையை நிலைபெறுத்திப் பண்படுத்த வேண்டு மென்பதும் ஸ்டாலின் கருத்து. டிராட்ஸ்கி இக்கருத்துக்கு மாறுபடுவோரானார். இது காரணமாகவும் வேறுசில காரணமாகவும் அவர் நாடு கடத்தப் பட்டார்.

ஸ்டாலின் தலைமையில் ருஷ்யா பலதிற மாறுதல் அடைந்து வரலாயிற்று. அவைகள் பொதுவுடைமையைப் படிப்படியாக வளர்ப்பன என்றும், படிப்படியாகத் தேய்ப்பன என்றும் பலவாறு சொல்லப்பட்டு வந்தன. இக்கருத்து வேற்றுமைத் திறங்களை ஆராய வேண்டுவது அநாவசியம்.

டிராட்ஸ்கி வெளி நாடுகளில் சுற்றிக் கொண்டிருந்தாலும், அவரது கொள்கைக்குத் துணை போவோர் ருஷ்யாவி லிருக்கிறார். அவர்களுக்கு ஸ்டாலின் செயல்கள் பிடிப்பதில்லை. ஸ்டாலின் செயல்களால் பொது உடைமையின் மூலத்துக்கே தீங்குநேரும் என்று டிராட்ஸ்கி கூட்டத்தார் எண்ணி வந்தனர். அவரது எண்ணந் தவறாகவு மிருக்கலாம்.

சென்ற வாரம் டிராட்ஸ்கி கூட்டத்தார் சிலர், ஸ்டாலின் ஆட்சியில் கொலை யுண்ட செய்தி 'நவசக்தி'யில் வெளி வந்ததை நேயர்கள் கவனித் திருப்பார்கள். அக்கொலைக்குரிய அடிப்படையான காரணம் என்னை? கருத்து வேற்றுமையே. டிராட்ஸ்கியின் கொள்கை யுடையாரைக் கொலை செய்ய இன்னும் ஸ்டாலின் ஆட்சி முயன்றே வருகிறது. கருத்துவேற்றுமை காரணமாகக் கொலைத் தண்டனை விதிப்பது நியாயமா என்பது கவனிக்கத்தக்கது. தம் கருத்துக்குத் தேசத்தில் ஆக்கம் உண்டா அல்லது டிராட்ஸ்கியின் கருத்துக்கு நாட்டில் ஆக்கம் உண்டா என்பதை மக்களின் வாக்குகளால் அறிய ஸ்டாலின் முற்பட்டிருக்கலாம். பெரும்பான்மையோர் விருப்பம் எப்படியிருக்கிறதோ அப்படி நடந்துகொள்வதே அறம். கொலையாட்சி நாகரிகமான தன்று. கொலையற்ற ஆட்சி எதுவாயினும் அதுவே போற்றற் குரியது. பொது உடைமை ஆட்சியிலுங் கருத்து வேற்றுமைக்கு இடமில்லை என்பது சிந்திக்கற்பாலது.

லெனினுக்குப் பலவழியிலும் மூளையாகத் துணை புரிந்தவர் டிராட்ஸ்கி. இப்பொழுது அவர் எங்கே எந்நிலையில் இருக்கிறார்? நார்வேயில் அவரும் அவர் தம் மனைவியாரும் சிறையிலிருக்கிறார். அவரை அங்கிருந்து துரத்துமாறு ஸ்டாலின் ஆட்சி நார்வே அரசாங்கத்தைக் கேட்டது. அதற்கு நார்வே அரசாங்கம் இணங்கவில்லை. டிராட்ஸ்கியே விரும்பினால் அவர் நார்வேவிட்டுப் போகலாம் என்றும், போகும் வரை அவர் காப்பிலிருப்பார் என்றும், தானேவலிந்து அவரை நாட்டை விடுத்துத் துரத்த விரும்பவில்லை என்றும் (நார்வே) அரசாங்கங் கூறிற்று. நார்வே அரசாங்கம், தம்மைச் சிறைப்படுத்தி யிருத்தலுந் தவறு என்று நிரூபிக்க அவ்வரசாங்கத்தார்மீது டிராட்ஸ்கி வழக்குத் தொடுக்க எண்ணுகிறாரென்றும் அறிகிறோம்.

- டிராட்ஸ்கியை எப்படியாவது கொல்லவேண்டுமென்பது அதிகாரத்திலுள்ள ஸ்டாலின் ஆசை. இது பொது உடைமைக் கட்சித் தலைவர் ஆசை! ஆகவே ருஷ்யாவில் தற்போதுள்ள ஆட்சி முறையிலும் அறம் இல்லை என்பது வெளிப்படை. ஆட்சி முறை எத்தகையதாயினும் ஆக; அதன்கண் அறமிருத்தல்வேண்டும். அதுவே நல்லாட்சி.

## இடியேறு

### ஜைனரும் படக்காட்சியும்

அப்பர் சரித்திரத்தில் ஜைனரைப் பற்றிய சில குறிப்புகளுண்டு. அவைகளைக் கதை யளவில் நோக்கினால் ஜைன சகோதரர் மனம் புண்படும் என்பதில் சந்தேகமில்லை. அப்பர் சொன்ன சைவமும், பழைய ஜைனமும் ஒன்றே என்பது ஆராய்ச்சியில் விளங்கும் உண்மை. அது பற்றிய விரிவுரை ஈண்டு வேண்டுவதில்லை. படக் காட்சியில் அமைவது வெறுங் கதையே யன்றி, ஆராய்ச்சி யன்று. கதையில் தம் மனத்தைப் புண்படுத்தும் பகுதியை விலக்கி விடுமாறு ஜைன சகோதரர்கள் ஆங்காங்கே கூட்டங்கூடி அறமுறையில் கிளர்ச்சி செய்கிறார்களென்று அறிகிறோம். அவர்கள்செய்யுங்கிளர்ச்சி நியாயமானதே. கதைகள் - செய்யப்பட்ட கால நிலைக்கும், இக்கால நிலைக்கும் பலவித வேற்றுமைகளுண்டு. இப்பொழுது மன்பதை விரும்புவது சமரசம்; பிளவன்று. ஆதலால் படக் காட்சிக் குழுவினர், ஜைன சகோதரர்கள் விரும்பும் முறையில் நடந்து கொள்வாரென்று நம்புகிறோம். தங்கள் விருப்பம் நிறைவேறும் வரை ஜைன சகோதரர்கள் அறக் கிளர்ச்சி செய்து வருதல் வேண்டும். மற்றச் சமயத்தவரும் ஜைன சகோதரர்களுக்குத் துணைசெய்தல் வேண்டும்.



# சர்வதேச சங்கத்தின் எதிர்கால வாழ்வு

## வெர்செயில்ஸ் உடன்படிக்கை

### ருஷ்யாவின் மனம்போன போக்கு

:o:

### சகோதர நேயமே அவசியம்

(திரு. லார்டு குயின்ஸ்பரோ)

இவ்வுலகத்தைவிட்டு நியாயம் பறந்துவிட்டது. நியாயமின்றேல் மனிதசமூகத்தினிடை முன்னேற்றம் உண்டாதல் எங்ஙனம்? உலகம் இப்போதுற்றிருக்கும் நிலை மனித சமூகத்தினரை ஒருங்கே கூடச் செய்கிறது. ஆபத்து வந்தபோதே நாம் நம்முடைய பலத்தை எண்ணிப் பார்க்கிறோம்; கடவுள் அநுக்கிரகத்தையும் வேண்டுகிறோம்.

#### குழப்பத்தின் விளைவு

ஐரோப்பிய யுத்தத்திற்குப் பிறகு உலகிலேயே பெரிய மாறுதல்கள் ஏற்பட்டன. பல சிறு நாடுகள் ஒரு பெரிய நாடாக மாற்றப்பட்டன. ஜெர்மனி போன்ற ஒரு பெரிய நாடு பல சிறிய நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. சில முடியாட்சிகள் குடியாட்சிகளாயின. ஒவ்வொரு நாட்டிலும் சுதந்திர வேட்கை அதிகமாயிற்று. மக்கள் சமாதானத்தை விரும்பினார்கள். இதுபற்றிக்கூடிய மகா நாடுகள் பல; பேச்சுகள் எண்ணிறந்தன; தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இறுதியில் விளைந்தது தற்போதுள்ள பெரிய குழப்பமே. இக்குழப்பத்திற்குக் கெல்லாக் உடன்படிக்கையும், லொகார்னோ சமாதானமும் உதவிபுரிவனவாயின.

வெர்செயில்ஸ் உடன்படிக்கைக்குப் பிறகு ஒரு பிரெஞ்ச் அரசியல் நிபுணர் மத்திய ஐரோப்பிய நாடுகள் அநேக நாடுகளாகப் பிரிக்கப்பட்டதால் அவைகளுக்குள் ஒற்றுமை நிலவாதென்றும், ஜெர்மனி தன் சேவக நிலையிலிருந்து முன்னேறல் முடியாதென்றும் நினைத்தார்; பசியாலும், பணமின்மையாலும் வாடும் மக்கள் எவ்வாறு மற்ற நாட்டினரை யொப்பச் சமமான அந்தஸ்தை அடைதல் கூடுமெனவும் அவர் சந்தேகித்தார். அவர் சந்தேகங்களும், நினைவுகளும் நடுவேனிற்காலக் கனவுகளாகவே முடிந்தன. உழைப்பும், திறமையும் ஒருங்கே அமைந்த மக்கள் சேவக நிலையிலேயே இருப்பர் என்று எண்ணுதல் தவறன்றோ?

#### உடன்படிக்கைகள்

தோல்வியுற்ற ஜெர்மனியின் நாடுகளைப் பங்குபோட்டுக் கொள்வதே வெர்செயில்ஸ் உடன்படிக்கையின் நோக்கம். அவ்வுடன்படிக்கை உலக சமாதானத்துக்கு எங்ஙனம் பொருந்தும்? எல்லா நாடுகளின் பிரதிநிதிகளும் சங்கத்திலிருந்தாலல்லவோ அதைச் சர்வதேசசங்கம் என்று அழைக்கலாம். ஜெர்மனி, ருஷ்யா முதலிய இருநாடுகளின் ஜனத்தொகை இருபதுகோடி. அமெரிக்கா ஐக்கிய மாகாணத்தின் ஜனத்தொகை பதினான்கு கோடி. இம் முப்பத்து நான்குகோடி மக்களின் பிரதிநிதிகள் சர்வதேச சங்கத்தில் இருக்கிறார்களா? இப்படிப்பட்ட சர்வதேச சங்கத்தின் அமைப்பே தற்சமய உலக நிலைக்குக் காரணமாகும். கெல்லாக் உடன்படிக்கையும், லொகார்னோ உடன்படிக்கையும் சமாதானத்தை ஏற்படுத்துவனவல்ல. அவை ஆபத்துண்டான காலத்தில் அவசரத்தோடு ஏற்படுத்தப் பட்டவையாகும்.

#### தொழிலாளர்

சர்வதேச சங்கம் ஒரு விஷயத்தில் மட்டும் நல்லபலனைத் தந்திருக்கிறது. தொழிலாளர் அநேக நன்மைகளைப் பெற்றிருக்கின்றனர். இத்தொழிலாளர் முன்னேற்றத்துக்குக் காரணம் ருஷ்யா என்றும் கூறலாம். ருஷ்யத் தொழிலாளரின் சர்வாதிகாரியே இதற்குக் காரணர்.

1919-ம் வருஷத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் எம். ஔடன்டிக்கின் அறிக்கை ஒன்றை வெளிப்படுத்தினர். ருஷ்ய நாட்டின் போல்ஷ்விக் கொள்கை பயங்கரத்தைத் தரக்கூடிய தென்றும், தோன்றும்போதே அதை அழித்துவிட வேண்டியது மற்ற நாடுகளின் கடமையென்றும், அப்படி அழிக்கப்படாவிட்டால் அக் கொள்கை உலகமுழுவதும் பரவக் கூடுமென்றும் அவர் அவ்வறிக்கையில் கூறினார். 1924-ம் வருஷத்தில் ஜெர்மனியின் யுத்தப்படை குறைக்கப்பட்டது.

#### ருஷ்யாவின் கூற்று

1931-ம் வருஷத்தில் ஆயுதப் படைகளை நிர்ணயிக்க ஒரு மகாநாடு கூட்டுவிக்கப்பட்டது. அம்மகா நாட்டின் தீர்மானப்படி ஒவ்வொரு நாட்டுக்கும் தகுந்தவாறு படைகளின் எண்ணிக்கை நிர்ணயிக்கப்பட்டது. சர்வ தேச சங்கத்தில் சம்பந்தப்படாத ருஷ்யா தன் இஷ்டம்போல ஆயுதப் படைகளைப் பெருக்கிற்று. 1935-ம் வருஷத்தில் மட்டும் இராணுவப் படைக்காக ருஷ்யா 650 கோடி ரூபா செலவு செய்தது. இவ்வளவு ஆயுதங்கள் எதற்காக? என்று சிலர் கேட்டல் கூடும். உலகத்தில் சமாதானம் நிலவ வேண்டுமென்று ருஷ்யா கூறுகிறது.

ஜெர்மனி ருஷ்யாவுக்கு அருகிலுள்ள நாடு. அது ருஷ்யாவின் ஆயுதப் பெருக்கத்தை விரும்பவில்லை. சென்ற ஆண்டு மார்ச்சு மாதத்தில் ஜெர்மனியில் கட்டாய இராணுவக் கல்வியை ஹிட்லர் உண்டாக்கினர். அதற்குப்பிறகு பிரான்சுக்கும் ருஷ்யாவுக்கும் இராணுவ ஒப்பந்தம் ஒன்று உண்டாயிற்று. இவ்வொப்பந்தத்தைத் தகர்க்கவே ஹிட்லர் ரைன்லாந்தில் இராணுவப் படைகளை ஏற்படுத்தினர்.

பிரான்ஸ் ருஷ்யா உடன்படிக்கையைப் பின்தொடர்ந்து வேறுசில நாடுகளின் உடன்படிக்கைகளும் தோன்றின. இவை ஒன்று சேர்ந்து ஜெர்மனியை அடக்கமுயன்றன. சர்வதேச சங்கம் தோன்றிய சில ஆண்டுகட்குப் பின்னர் ருஷ்யா சங்கத்தில் அங்கம் பெற்றது. சில ஆண்டுகளுக்கு முன்னர் ஜப்பான் சங்கத்திலிருந்து விலகிக்கொண்டது. பிலாகுன் என்ற ருஷ்ய தேசவாசி பிரான்ஸ் வந்தார். பிரெஞ்சு அரசியல் வாதியான லியான் பிளம்மைப்பார்த்தபோது "இப்போது இருக்கும் நிலையில் சர்வதேசசங்கம் நீண்ட நாட்கள்வரை வாழ்ந்திருத்தல் இயலாதென்றும், உலகத்தில் சமாதானத்தை ஏற்படுத்தவும் அச்சங்கத்தால் இயலாது" என்று அவர் கூறினர்.

சர்வதேசசங்கத்தின் வெற்றி ஒவ்வொருவருடைய தேசிய உணர்ச்சியையும் பொறுத்திருக்கிறது. ஒவ்வொருவரும் பிறரைநேசித்தல் அவசியம். இப்பெருங்குணத்தைத் தற்போது நமக்கு மன்னர் பிரானாக இருக்கும் எட்வர்ட் மன்னரிடத்துக் காண்கிறோம். அவர் வேல்ஸ் இளவரசராகஇருந்து சாம்ராஜ்யத்தைச் சுற்றி வந்தபோது மிகத் தாழ்ந்த மக்களிடத்தும் கலந்து உறவாடினர்.

#### மனித இயற்கை

மனித சமூகத்தைக் கட்டுப்படுத்துவது இயற்கை. மனித சமூகத்திடைப் பல பிரிவுகள் இருக்கின்றன. ஒவ்வொரு பிரிவினரும் தமக்குச் சொந்தமான சில கொள்கைகளைக் கொண்டிருக்கின்றனர். அக் கொள்கைகளைக் காலத்திற் கேற்றபடி மாற்றிக்கொள்ள அப்பிரிவார் சம்மதியார். இஃது இவ்வுலகத்தின் இயற்கை. அதனால் உலக முழுவதும் ஒரே கொள்கை பரவுதல் வேண்டுமென்று உழைத்தல் வீணாகும்.

தற்காலத் தனிமனிதனுடைய விருப்பங்கள் என்ன? நகர வாழ்வில் இச்சை வைத்த காலங்கள் ஒழிந்து போயின. இப்போது ஒவ்வொரு மனிதனும் நகர வாழ்வை வெறுக்கிறான். இயற்கையோடு விளையாட அவாவுகிறான்; மன அமைதியை நாடுகிறான். தேசமாவது என்ன? பல திறப்பட்ட மக்களைத் தன்னகத்தே கொண்டதுதேசம். அதனால் தனிப்பட்ட மனிதனுக்கும் தேசத்துக்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறது.

அந்நிய நாடுகளுக்குச் செல்லும் ஒருவன் சில நாட்களில் சென்ற நாட்டின் பழக்க வழக்கங்களைப் புகழ்ந்து பேச ஆரம்பிக்கிறான். இது மனிதஇயற்கை. அதனால் சர்வ தேச சங்கம் மக்களுக்குள் நெருங்கிய சம்பந்தத்தை யுண்டாக்குதல் வேண்டும். அப்போதே மக்களுக்குள் சகோதர நேயம் உண்டாகும். இராணுவப் பேச்சுக்களையும் ஆயுதப் படைப் பேச்சுக்களையும் விட்டு அன்பால் சகோதர நேயத்தை மக்களிடையே வளர்க்கச் சங்கம் முற்படுமாயின் உலகத்திலேயே புதியதோர் சகாப்தம் தோன்றுவ தாகும்; சர்வ தேச சங்கத்துக்கும் ஒரு புத்துயிர் உண்டாகும். சர்வதேச சங்கம் இவ்வழியில் உழைத்தல் அவசியம்.

—கை. செ. அ. ஆ.

# ஸ்பெயின் கலகமும் மற்ற நாடுகளும்

## வரும் மாதத்தில் உலக யுத்தம்

### ஸ்பெயினில் இதாலிய விமானங்கள்

### உலக சமாதான மகாநாடு

(வாரணன் திரட்டியது)

வட ஸ்பெயினில் பலத்த யுத்தம் நடந்து வருகிறது. தலைநகரான மாட்ரிட் நகரம் மட்டும் தம் வசமாய் விட்டதெனக் கலகக்காரர் கூறுகிறார். ஸ்பெயினிலுள்ள பிரெஞ்சுக்காரரை ஸ்பானியர் அவமதிக்கின்றனர். கலகக்காரர் அவர்களைப் பொதுஉடைமைக் கொள்கையுடையோரென்று கூறுகிறார்; கலகக்காரர்களுக்கு மறைமுகமாக ஆயுதங்களை உதவுகிறார்களோவென்று அவர்களை அரசாங்கத்தார் சந்தேகிக்கின்றனர். மாட்ரிட்டில் ருஷ்ய ஸ்தானிகருக்கு அதிக மதிப்பு கொடுக்கப் படுகிறது. சாரகோஸாவுக்கு அருகிலுள்ள ரயில் பாதைகளும், நகரங்களும் சர்க்கார் வசமிருக்கின்றன. மாட்ரிட்டிலிருந்து 62 மைல் தூரத்திலுள்ள ஓரபெர்ஸா என்ற கிராமத்தைக் கலகக்காரர் கைப்பற்றினர். இருனையும், சான் ஸபாஸ்டியனையும் கைப்பற்றக் கலகக்காரர் தம்மாலான முயற்சிகளைச் செய்யத் தலைப்பட் டிருக்கின்றனர்; இருன் நகரம் பணியாவிட்டால் அந்நகரை நெருப்புக்கு இரையாக்குவதாகப் பயமுறுத்தினர். அதனால் 600 பெண்களும் குழந்தைகளும் பிரான்சுக்குச் சென்றார்கள். அரசாங்கத்தாரை விடக் கலகக்காரரே மற்ற நாடுகளிலிருந்து அதிக உதவியைப் பெறுகின்றனர். 24 இதாலிய விமானங்கள் கலகக்காரர் உதவிக்காக விகோ என்ற இடத்திற்குச் சென்றிருக்கின்றன. இவை போர்ச்சுகல் நாட்டு வழியாகவே வந்தன.

#### சமாதான முயற்சி

கலகத்தில் நடக்கும் கொடுமைகளைத் தணிப்பதற்காக செயிண்ட் ஜீண்டலூஸ் என்ற இடத்தில் ஒரு கூட்டம் நடைபெறுகிறது. இக்கூட்டத்துக்குக் கலகக்காரரில் நால்வரும், அரசாங்கத்தார் தரப்பில் நால்வரும் வந்திருக்கின்றனர். இக்கூட்டத்தை ஒரு நல்ல முடிவுக்குக் கொண்டுவர இதாலி, ஜெர்மனி, ஆர்ஜண்டைன், உருக்வே முதலிய நாடுகள் முயல்கின்றன. பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா முதலிய நாடுகள் இச்சமாதானக் கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை. கலகக்காரர் சமரஸத்திற்கு ஒத்துக் கொள்வதாகத் தெரிகிறது.

#### மற்ற நாடுகள்

ஸ்பெயின் கலகம் அடங்கியதும் மற்ற நாடுகளில் இம்மாதிரியான கலகங்கள் தோன்றுதல் கூடுமெனச் சிலர் கூறுகிறார். பிரான்சின் பாஸிஸ்ட் கட்சியினரும், செகோஸ்லாவாகியாவிலுள்ள நாஸி ஜெர்மானியரும் அந்த நாடுகளில் இம்மாதிரியான கலகங்களை ஏற்படுத்தலுங்கூடுமாம். ருஷ்யாவில் தற்போது நடந்து கொண்டிருக்கும் புரட்சிகளைப் பற்றியும் பலர் அறிவர். இதன் மத்தியில் பிரான்சுக்கும் போலந்துக்கும் ஓர் உடன்படிக்கை ஏற்பட் டிருக்கிறது. இம்மாதம் 6-ம் தேதி பிரசல்ஸில் உலக சமாதான மகாநாடு நடைபெறும். இந்தியாவிலிருந்து வி. கே. கிருஷ்ணமேனன் சென்றிருக்கிறார். ஐரோப்பிய நாடுகள் எவ்வாறு இரண்டு பிரிவுகளாகப் பிரிகின்றன என்பதைச் சற்று யோசித்துப் பார்த்தல் அவசியமாகும். சில நாட்களுக்கு முன் ஹெர்க்ரெய்சர் சர்வதேச சங்கத்தில் பேசியதுபற்றியும், அதுபோது போலந்து ஜெர்மனிக்கு விரோதமாக விவாதித்தது பற்றியும் கூறியுள்ளோம். அதைக் கருத்தில் கொண்டே இவ்வுடன் படிக்கையைக் கவனித்தலும் அவசியம். ரைன்லாந்தைப்பற்றிய லண்டன் கூட்டம் ஜெர்மனியையும், இதாலியையும் மற்ற மூன்று நாடுகளோடு கலந்து கொள்ளுமாறு வேண்டிற்று. அதற்கு அவ்விரு நாடுகள் ஒருவாறு பதிலளித்தன. அப்பதில் முழுமனதோடு அளிக்கப்பட்டதன்று. ஸ்பெயின் விஷயமாகப் பிரான்ஸ் கூறிய விஷயங்களுக்கு இதாலியும் ஜெர்மனியும் சம்மதித்திருக்கின்றன. இப்போது போலந்து பிரான்சோடு சேர்ந்தது. பிரான்ஸ், போலந்து, ருஷ்யா முதலியநாடுகள் ஒரு பக்கம் நிற்கின்றன. மறுபக்கம் ஜெர்மனி, இதாலி ஆஸ்டிரியா முதலிய நாடுகளைக் காண்கிறோம். ஸ்பெயின் எப்படியிருக்கிறது? எப்பக்கம் ஸ்பெயின் நிற்கக்கூடுமென்பது கலக முடிவைப் பொறுத்திருக்கிறது.

#### உலக யுத்தம் பற்றிய ஜோஸ்யம்

ஐரோப்பிய நிலையைக் கண்டு அந்நாட்டுப் பத்திரிகைகள் சில ஜோஸ்யம் கூறத்தொடங்கிவிட்டன. "தி ப்ராபஸி ஆப் தி கிரேட் பிரமிட்" என்ற பத்திரிகை கீழ்வரும் விஷயத்தைக் கூறுகிறது.

"தற்போதுள்ள நிலைமையையும் 'எண்ட்ரன்ஸ் தேதி'யையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இம்மாதம் 15 அல்லது 16-ம் தேதி ஒரு மாறுதல் ஏற்படுதல் கூடும். அம்மாறுதலே கடவுள் உணர்ச்சி யற்ற நாட்டில் கடவுள் உணர்ச்சியை யுண்டாக்க ஓர் உலகப் போரைத் தொடங்கும்."

டெய்லி எக்ஸ்பிரஸ் பத்திரிகையும் ஒரு ஜோஸ்யம் கூறுகிறது. "பைபிளை ஆதாரமாகக் கொண்டு கணக்கு எடுக்கப்பட்டது. யூதர்களுக்கு 1936-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 20-ம் தேதி ஒரு முக்கியநாளாகும். பின்னர் ஆர்மகடான் என்ற உலக யுத்தம் தோன்றும். இதுவே இறுதி உலகயுத்தமாகும். இந்த யுத்தம் 1936-ம் வருஷம் அக்டோபர் மாதம் 6-ந் தேதி ஆரம்பமாகும்."

## திருச்சி சம்பவம்

தமிழ்நாடு காங்கரஸ் கமிட்டியாரின் உத்திரவுப்படி ஸ்ரீமான்கள், பொன்னையா பிள்ளை (திருச்சி நகரசபைத் தலைவர்) பு. இராமஸ்வாமி அய்யர், கோபால் ராவ், பொன்னுசாமி முதலியார், ஊர்தாஸாமி, பிச்சைப் பிள்ளை, பொன்னுசாமி செட்டியார் (நகரசபை அங்கத்தினர்கள்) முதலியவர்கள் காங்கரஸ் அங்கத்தினர் பதவியிலிருந்து விலகிக்கொண்டார்கள். இது சம்பந்தமாகத் திரு பொன்னையா பிள்ளை விடுத்த அறிக்கையில் பின் வருமாறு குறிப்பிடுகிறார்:—

"முதலில் நான் காங்கரஸ் சார்பில் அபேட்சகராக நிற்க விரும்பவில்லை. இங்குள்ள காங்கரஸ் வாதிகள் வற்புறுத்தியதால் ஒருவாறு அதற்கு இசைந்தேன். இப்பொழுது எனது அங்கத்தினர் பதவியை இராஜிநாமா செய்யுமாறு காங்கரஸ் ஆணையிட்டுளது. நான் காங்கரஸிலிருந்து விலகிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. ஆயினும் என்னிடம் அளிக்கப்பட்டுள்ள பதவியின் பொறுப்பையுணர்ந்து என் கடமையைச் செய்வேன்."

* * *

டாக்டர் ராஜன் தமது காங்கரஸ் பதவிகளை யெல்லாம் இராஜிநாமா செய்துவிட்டதால் தமிழ்நாடு ஹரிஜன சேவா சங்க வேலையை நன்கு நடத்தலாமென்று ஹரிஜன மத்திய போர்டு காரியதரிசியான திரு. ஏ. வி. தக்கர் கூறுகிறார். இம் மாதம் 11-ந் தேதி ஹரிஜன சேவா சங்க நிர்வாகக் கமிட்டி கல்கத்தாவில் கூடும். தமது ராஜிநாமாவைத் திரும்பப் பெற்றுக்கொள்ளுமாறும், தமிழ்நாடு ஹரிஜன சேவா சங்கத் தலைவராக விருக்குமாறும் அது டாக்டர் ராஜனைக் கேட்டுக்கொள்வதாகத் தீர்மானிக்குமென்று கருதப்படுகிறது.

* * *

திருச்சி தகராறு சம்பந்தமாக ஸ்ரீ. எப். ஜி. நடேச அய்யர் பண்டித ஜவஹருக்கு எழுதியுள்ள கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :—

" தற்காலம் தமிழ்நாட்டில் காங்கரஸின் நிலையைத் திருச்சி சம்பவம் படம் பிடித்துக் காட்டுகிறது. இது சம்பந்தமான முழு விபரமும் தலைமை ஸ்தானத்திலுள்ள ஒருவர் விசாரிக்க வேண்டியதாகும். இதுவே தமிழ் நாட்டுக் காங்கரஸ்காரர் பலரின் நோக்கம்."

## சாப்பிடுவதில் வீரன்

சீன தேசத்தில் கெயோ வென்போ என்ற ஒரு கிழவர் இருக்கிறார். அவருக்கு வயது ஐம்பது. தினந்தோறும் ஒழுங்காகச் சாப்பிடுகிறார். ஒருநாளைக்குச் சுமார் 3 வீசைப் பன்றி இறைச்சியையும், ஒரு வீசை மாட்டிறைச்சியையும், சுமார் இரண்டுபடி அரிசிச் சோற்றையும் அவர் உண்கிறாராம். அவருக்கு ஐந்து மனைவியரும், ஐந்து குழந்தைகளும் இருக்கிறார்கள். இம்மனிதரே சீன தேசத்தில் அதிகமாகச் சாப்பிடுபவராம்.

## வங்காளி பாபுவின் திருவிளையாடல்கள்

ஐதராபாத்தில் கொள்ளையர் பயம் அதிகமாக விருக்கிறது. ஒருகுறித்த நேரத்தில் வீட்டில் கொள்ளையடிக்கப் போவதாகப் பலவீட்டுக்காரர்களுக்குப் பயமுறுத்தல் கடிதங்கள் கிடைக்கின்றன. அதன் இறுதியில் 'வங்காளிபாபு' என்று கையெழுத்திடப் பட்டுளதாம். சில சமயங்களில் டெலிபோன் மூலமாகவும் பயமுறுத்தப் படுகிறது. இது சம்பந்தமாக ஒருஹிந்துபிச்சைக்காரன் கைது செய்யப்பட்டிருக்கிறான். இவன் 30 தடவை சிறை சென்றவனும்.

# ருஷ்யாவில் நெப்போலியன்

## பத்தாண்டுகளில் உலகாள்வான்

### வீரனாக விரும்புகிறான்

—:o:—

### நெப்போலியன் சரித்திரத்தைப் படிக்கிறான்

(ஜேர்வி. பாரன்டி)

ருஷ்யாதேசத் தலைநகர் மாஸ்கோ. அந்நகரில் நெருக்கமானதெரு ஒன்றிருக்கிறது. அங்கே பலருக்கு அறிமுகமான ஒரு வீட்டில், பதினைந்து வயதுள்ள சிறுவன் ஒருவன் வளர்கிறான். சீக்கிரம் வளரவேண்டுமென்றும், தேசத்தை ஆளவேண்டு மென்றும் அவன் விரும்புகிறான் ; மற்ற ருஷ்யர்களை விடத் தான் அதிக பலசாலியெனக் கருதுகிறான் ; ரோமாபுரி வீரர்களைச் சிந்திக்கிறான் ; மகா பிரெடெரிக்கின் படையெழுச்சிகளை மனத்தில் காண்கிறான் ; கார்த்தேஜ் நகரத்தின் சரிதம், இங்கிலாந்து தேசத்தின் சரிதம், ஐரோப்பாவின் பலதிறப்பட்ட நாடுகளின் அரசியல் விவகாரங்கள் முதலியன அவன் மனத்துள் படம்போல் நிற்கின்றன. சீசராகவோ அல்லது நெப்போலியனாகவோ இருப்பதாக அப்பையன் அடிக்கடி கனுக்காண்கிறான். இதில் ஒருவித சந்தேகமுமில்லை. தன்னுடைய செய்கைகளையே பையன் சிந்திக்கிறான். அவனுடைய பழைய வாழ்க்கையே அவன் முன் நிற்கிறது. அந்தச் சிறுபையனே நெப்போலியன் போனபார்ட்.

#### பிறப்பும் வளர்ப்பும்

1921-ம் வருஷம் மார்ச் மாதம் 2-ம் தேதி அச்சிறுவன் பிறந்தான். அச்சிறுவனுடைய தகப்பனார் ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர். அவர் பயங்கரமான ஒக்பு வம்சத்தைச் சேர்ந்தவர். அவனுடைய தாயார் பலபாஷைகளை அறிந்த உத்தமி. வெளிநாட்டிலிருந்து வரும் பிரயாணிகளுக்கு அவரவர்களுடைய பாஷைகளில் ருஷ்யாவைப்பற்றிக் கூறுதலே இந்த அம்மையாரின் வேலை. அச்சிறுவனைத் தவிரப் பெற்றோருக்கு வேறு குழந்தைகள் இல்லை. இவ்வொரு சிறுவனுடைய உபத்திரவத்தையே பெற்றோர் தாங்கக் கூடாதவராக இருக்கிறார். சிறுபிள்ளைகள் படிக்க நல்ல புஸ்தகங்களை ருஷ்யா வழங்குதலில்லை. அச்சிறுவன் தனக்கு இஷ்டமான புத்தகங்களையே படிக்கிறான். அவைகளிலிருந்தே ஒரு புத்துணர்ச்சியையும் பெற்றான். பதினெட்டாம் நூற்றாண்டில் கார்சிக பிதாவுக்குக் கூறியது போலவே இன்றும் தன் பெற்றோரிடம் "அறிவியல் கலையில் கடைசிப் பையனை இருப்பதைக் காட்டிலும் தொழிற்சாலையில் கைதேர்ந்த தொழிலாளியாக இருக்க விரும்புகிறேன்" என்று அவ்வாலிபன் கூறுகிறான். இச்சொற்களைக் கேட்டு 'நெப்போலிய'னின் ருஷ்ய பிதா நடுங்குகிறார். தம்மகனுடைய கொள்கைகளைக் கொண்ட போராற்றல் வாய்ந்த ஒருவனே உலகத்தை ஆளக்கூடும் என அவர் கருதுகிறார். இளைய நெப்போலியன் போராற்றல்வாய்ந்த மனிதன் என்பதைமட்டும் நம்பவில்லை. தன் எண்ணங்களைத் தன்னுடைய புத்தகங்களில் இளைஞன் எழுதுகிறான். பிரயன்தோட்டத்தில் நெப்போலியன் தன் எண்ணங்களைப் புஸ்தகங்களில் நானூறு பக்கங்கள் எழுதியதை ஞாபகப்படுத்தல் இவ்விடத்திற்கு அவசியமாகும். அப்போது தன்நாட்டார் வேறொரு நாட்டாரால் வெற்றிகொள்ளப்பட்டவர் என்பதை நெப்போலியன் விரும்பினான் இல்லை.

#### சிறுவனின் விருப்பம்

மதத்தைப் புறக்கணிக்கும் ஜனசமூகம் முன்னேறுதல் எக்காலும் முடியாதென்று அந்த இளைஞன் கருதுகிறான். நெப்போலியன் பிரான்ஸின் மன்னனாகவிருந்த காலத்தில் அநேக படிப்பினைகளைப் பெற்றான். ஸெயின்ட் ஹெலினாத்தீவில், மரணத்தறுவாயில் தன் வாழ்வில் நடந்த சம்பவங்களை நினைத்துத் தன் குற்றங்களை அவன் உணர்ந்தான்.

ருஷ்யாவில் வளரும் அச்சிறுவன் தான் அறிந்த வீரர்களைக் காட்டிலும் திறமை யுடையவனாக விளங்க விரும்புகிறான். இன்னும் சில வருஷங்களில் அச்சிறுவன் உலகில் புகழ் அடைவான். யுத்தமும் ரத்தப் பெருக்குமின்றி அவன் உலகினை வென்று அரசாள்வான்.

இப்பொழுது அச்சிறுவனை நெப்போலியனுடன் முற்பிறவியிலிருந்தவர் ஒருவருமிலர். நெப்போலியன் தன் தாய் வயற்றில் சிசுவாக விருந்த பொழுது, அந்தச் சிசுவுடன், போர்க்களத்திற்குச் சென்ற 'கார்ஸிகத்தாய், இன்னும் சில நாளில் இப்பிறவியில் நெப்போலியச் சிறுவனைச் சந்திப்பார்' அவர் இப்பொழுது ஆணாகப் பிறந்துளார்.

#### உலகறிந்த ஒருவன்

அவ்விளமை நெப்போலியன் தன் நாட்டிற்குத் தன்னைப்போலொரு வீரன் தேவை யென்று நினைக்கிறான். நெப்போலியன் ருஷ்யாவைக் கைப்பற்ற எண்ணிய விதமாகவே தானும் ருஷ்யாவை அரசாள" அச்சிறுவன் கருதுகிறான்.

இப்பொழுது ருஷ்யாவில் வளரும் அச்சிறுவன் நெப்போலியனின் சரித்திரத்தைப்படிக்கிறான். இன்னும்பத்து வருஷங்களில் அந்த ருஷ்யச் சிறுவன் தன் எண்ணங்களை நிறைவேற்றுவான். இன்னும் இருபது வருஷங்களில் அச்சிறுவன் உலகறிந்த ஒருவனாவான்.

—"பியர்ஸன்ஸ் வீக்லி"



## ரவீந்திரரும் கடவுளும்

வெகுகாலமாக இந்தியாவே மனித சமூகத்தின் பல பிரிவுகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து வருகிறது. ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருப்பது போற்றத்தக்கதாகும். இவ்விரு இடங்களிலும் உள்ளவர் அநேகமாக ஒரே இடத்தில்தோன்றிய மக்கள் கூட்டத்தின் சந்ததிகளே யாவர். ஐரோப்பாவில் பல மக்கட் கூட்டத்தார் நிறத்திலும் பழக்க வழக்க ஒழுக்கங்களிலும் மாறுபட்ட போதிலும் அவர்களுக்குள் சச்சரவுகள் நேருதல் இல்லை.

இந்தியாவில் இது வேறு விதமாக இருக்கிறது. சரித்திர ஆரம்பகாலத்திலேயே ஆரியர் இந்திய நாட்டின் கருநிறமுடைய பண்டை மக்களோடு போராட நேரிட்டது. இம் மக்கள் ஆரியரினும் அறிவில் தாழ்ந்தவராக இருந்தனர். இவ்விரு கூட்டத்தாரை விடத் திராவிடரும் இருந்தனர். அவர்களுடைய நாகரிகமே வேறாயிருந்தது. ஆரியருக்கும் திராவிடருக்கும் நாகரிகம் ஒழுக்கம் கடவுள் வழிபாடு முதலிய துறைகளில் பல வித்தியாசங்கள் இருந்தன. பல ஆண்டுகளுக்குப் பிறகு பெரு முயற்சியால் இந்தியாவில் மக்கள் ஒருவரோடொருவர் சேர்ந்து வாழத் தலைப்பட்டனர். இந்திய மக்களிடத்தே இவ்வித்தியாசம் இன்றுவரை வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இவ்வித்தியாசமே இந்தியாவுக்கு ஒரு புத்துணர்ச்சியைத் தந்தது. இவ்வித்தியாசத்தாலேயே மக்கள் கடவுளைப்பற்றி ஆராய்ச்சி செய்யத் தலைப்பட்டார்கள் ; கடவுள் ஒருவரே என்றும் ஒவ்வொருவருடைய ஆன்ம சக்தியினாலேயே அவரை அடைதல் கூடும் என்றும் தெரிந்தார்கள்.

—"தி இந்தியன்"

## பாம்புப் பந்தயம்

நியூமெக்ஸிகோவிலுள்ள காரல்ஸ்பாத் என்ற நகரில் பாம்புப் பந்தயம் ஒன்று நடைபெற்றது. எழுபத்தைந்து பாம்புகள் பந்தயத்துக்கு வந்தன. 100 அடிவட்டத்தின் மத்தியில் இவை நிறுத்தப்பட்டன. பாம்புகளின் வால் நுனிகள் நேராக வைக்கப்பட்டன. பார்ப்போருக்கு ஆபத்துண்டாகாதிருக்க இரண்டு வேலிகள் கட்டப்பட்டிருந்தன. இவ்வேலிகளில் நுழைந்து பாம்புகள் செல்லா.

## பதவியை இழத்தல் கூடாதா ?

### ஜவஹருக்கு உபசாரமளித்த பலன்

பஞ்சாப் அரசாங்கத்தார் லையால்பூர் நகரசபை அங்கத்தவர்களான சாந்தசிங் எம். எல். ஏ. உள்ளிட்ட அறுவருக்கு ஓர் அறிக்கை விடுத்துளார். தங்களது பதவியைத் துஷ்பிரயோகம் செய்ததால் ஏன் அவர்கள் தங்கள் பதவியிலிருந்து நீக்கப்படலாகாது என்பதை எழுத்து மூலம் பதினைந்து நாட்களுள் தெரிவிக்குமாறு அதில் குறிப்பிடப் பட்டுள்ளது. லையால்பூருக்கு ஜவஹர் விஜயம் செய்தபோது நகரசபைத் தீர்மானத்துக்கு விரோதமாக சாந்தசிங் உள்ளிட்ட சிலர் நகரசபையின் பெயரால் ஜவஹருக்கு உபசாரப் பத்திரம் அளித்ததாகவும், அதன் பொருட்டே மேற்கண்ட அறிக்கை பிறப்பிக்கப்பட்டுளதாகவும் கூறப்படுகிறது.



சில நாட்களுக்குள் சுதந்திர வாழ்வின் ஒரு பகுதியை இந்தியா அடையப் போகிறது. இந்நிலைமையை இந்தியா பெறச் சாதகமாக இருந்த சில காரணங்களைக் காணும் போது சந்தோஷம் பிறவாமல் இருப்பதற்கில்லை. உலகத்தின் பழையகாலத்து நாகரிகத்தின் சரித்திரமே இந்தியாவின் சரித்திரமாகும். பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்னமேயே இந்தியாவோடு எகிப்தும், அரேபியாவும் சம்பந்தம் பெற்றிருந்தன. அலெக்ஸாண்டர் இந்தியாமீது படையெடுத்தார். கிரேக்கராஜ்யமும் சில ஆண்டுவரை வடநாட்டில் இருந்தது. இருந்தும் ஏன் இந்தியாவில் கிரேக்க நாகரிகம் பரவவில்லை ? அக் கிரேக்கநாகரிகம் இடைக்காலத்தில் எவ்வளவு சீக்கிரத்தில் காட்டுத் தீப்போல ஐரோப்பிய நாடுகளில் பரவிற்று. இது இந்திய நாகரிகத்தின் சிறப்பை விளக்குகிறதன்றோ ?

#### மன்னராட்சி

இந்தியா முழுதும் அலெக்ஸாண்டர் படையெடுத்த காலத்தில் மன்னராட்சியே தலைசிறந்து விளங்கிற்று. ஜனநாயக ஆட்சிபற்றி மக்கள் உணர்ந்திருந்தும் ஜனநாயக ஆட்சி இந்தியாவில் நிலைபெறவே யில்லையென்று கூறலாம். தென்னாட்டில் வெகுகாலம் வரையில் சேர, சோழ, பாண்டிய நாடுகளே இருந்தன. இவை மன்னராட்சிகளல்லவோ?

## அரசாங்கத்தின் மூக்குத்தூள் தர்மம்

அமெரிக்கா நாட்டுப் பார்லிமெண்டின் உயர்தர சபையில் உள்ள அங்கத்தினர், சபை நடந்து கொண்டிருக்கும்பொழுதே மூக்குத்தூள் போட்டுக்கொள்ள அனுமதிக்கப்படுகிறார். உலகத்திலுள்ள எந்தப் பார்லிமெண்டிலும் அங்கத்தினர்க்கு இவ்வளவு சுதந்திரம் அளிக்கப்படுவதில்லை. அமெரிக்கப் பார்லிமெண்டு சபையில் உதவித் தலைவருக்கு அருகில் ஒரு பெட்டியில் மூக்குத்தூள் அடைத்துவைக்கப்படுகிறது. வேண்டும்பொழுது அங்கத்தினர் அதை உபயோகித்துக் கொள்ளலாம். பார்லிமெண்டு சபை கூடுமுன் அந்தப்பெட்டியில் மூக்குத்தூள் அடைத்துவைக்கப் படுகிறது.

#### பிரான்சின் பலகட்சி அரசாங்கம்

உலகத்திற்கு ஜனநாயக அரசாங்கம் புதியதல்ல. இங்கிலாந்தில் பார்லிமெண்டரி ஜனநாயக அரசாங்கம் ஏற்படுவதற்கு முன்னமேயே கிரீஸில் ஜனநாயக அரசாங்கங்கள் தலைகாட்டின. அக்காலத்தில் கட்சிபேதம் இல்லை. வாக்காளர்களுக்குள்ளே சில பிரிவுகள் இருந்தன. இவ்விதப் பிரிவுகளே அரசாங்கத்திலும் நுழைந்தன. இம்மாதிரிப் பிரிவுகள்உள்ள நாடுகளில், எக்கட்சியார் அரசாங்கத்தை ஏற்று நடத்துவது என்ற விஷயத்தில் பெரிய கலகங்கள் உண்டாகும். ஒருவருஷத்தில் பிரான்சில் ஐந்து மந்திரிசபைகள் மாறின. இப்படி அநேக பிரிவுகள் இருப்பது தேசத்திற்கு இடையூறு செய்வதாகாதா ?

#### இந்தியாவில் ஜனநாயக ஆட்சி

தற்போது ஜனநாயக ஆட்சி மறைகிறதென்றும், சர்வாதிகாரம் தோன்றுகிறதென்றும்சிலர் கூறுகிறார். ஜர்மெனி, இதாலி, கிரீஸ் முதலிய இடங்களில் சர்வாதிகார ஆட்சிகள் ஏற்பட்டு விட்டன. ஸ்பெயினிலும் சர்வாதிகாரம் உண்டாகுமோ வென்று அஞ்சப்படுகிறது. இங்கிலாந்தில் மட்டும் வெகுசுலபத்தில் சர்வதிகார ஆட்சி ஏற்படுவதற் கில்லை. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஆதிக்கம் பெற்ற பிறகு ஜனநாயக ஆட்சி தலைகாட்டா தொழிந்தது. இம்மாறுதலே இந்தியரின் மனத்தைப் புண்படுத்தி

# இந்தியா விரும்புவது என்ன?

## காங்கரஸின் நோக்கம்

### ஜனநாயக ஆட்சி நிலைக்குமா ?

### சீர்திருத்தத்தின் விளைவு

(திரு. டி. பி. எஸ்.)

வந்தது. சில ஆண்டுகளுக்கு முன்னர் லார்ட் மார்லி ஆப் பிளாக்பர்ன் அந்நியர் ஆட்சி இந்தியாவுக்குப் பொருத்தமானதல்ல என்று கூறினர். இப்போது இந்திய அரசாங்கத்தில் ஏற்பட்ட மாறுதலுக்குக் காரணர் யாவர்? இந்திய தேசியக் காங்கரஸே இதற்குக்காரணம் என்னலாம். இந்திய தேசியக் காங்கரஸுக்குக் குழந்தைப் பருவத்தில் ஆக்கம் தேடியவர் ஆங்கிலேயரே. அவ்வாங்கிலேயர் பிரிட்டிஷ் பார்லிமெண்டரி ஜனநாயக ஆட்சியில் மிக்க பயிற்சிப் பெற்றவராவார். அவர் ஆசிக்கத்தால் வளர்ந்த காங்கரஸ் இன்று இந்தியாவுக்குப் பிரிட்டிஷ் பார்லிமெண்டரி ஜனநாயக அரசாங்கத்தைப் போன்ற ஓர் அரசியலை விரும்புகிறது. இந்தப் பிரிட்டிஷ் அரசியலுக்கே ஒரு பெரிய தனிமதிப்பு இருக்கிறது. இதுவரை எத்தனையோ நாடுகளின் அரசியல்கள் மாறின. ஆனல் பிரிட்டிஷ் அரசியல் மட்டும் மாறிற்றா? காலத்துக் கேற்ற வகையில் அரசியல் அமைப்பில்சிற்சில மாறுதல்கள் செய்யப்படுகின்றன.

#### இந்திய அரசியல்

சென்ற சில ஆண்டுகளாக மேற்கு நாடுகளின் முறையில் ஓர் அரசாங்க அமைப்பில் இந்தியா தலைப்பட்டது. அடுத்த ஆண்டில் சுயராஜ்யத்தைநோக்கிப் பின்னுமோர் அடி எடுத்து வைக்கும். இரட்டையாட்சியால் இந்தியாவுக்கு ஒருவிதப் பயனுமில்லை என்பது காணப்பட்டது. இனிவரப்போகும் அரசாங்கத்தில் மந்திரிகளே கவர்னருக்கும், இராஜப் பிரதிநிதிக்கும் அரசியல் விஷயத்தில் பொறுப்பானவர். அவர்களுக்கு மிகக் கட்டுப் பாடு வாய்ந்த சட்டசபை ஒன்று யோசனை கூறி வரும். இம்மாதிரியான புது அரசாங்கம் எவ்வாறு நடைபெறும் ? இப்புதிய அரசாங்கம் மிக ஒழுங்கான முறையில் நடைபெறுதல் கூடும். இதற்குச் சென்னையே போதிய வழிகாட்டியாகும்.

பெரிடேல் கீத்என்பவர் மிகத் திறமைவாய்ந்த சரித்திரக்காரர். அவர் புகழ் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் மட்டுமல்லாது அந்நிய நாடுகளிலும் பரவுகிறது. இச்சரித்திரக்காரர் சீர்திருத்தங்கள் இந்தியாவிலும் நிலைபெறும் என்று உறுதியாகக் கூறுகிறார். இப்பொழுது இந்தியாவில் பலகட்சிப்பிரிவுகள் இருக்கின்றன. இக்கட்சிப்பிரிவுகள் பிரிட்டிஷ் பார்லிமெண்டரி ஜனநாயக அரசியலுக்குக் கேவலமானவை என்பதை மேலே பிரெஞ்ச் அரசாங்கத்தை உதாரணமாகக் காட்டிக் கூறினோம். இந்தியா பெரியதேசம். இப்பெரிய தேசத்தில் எத்தனை கட்சிகள் இருக்கின்றனவென்று உறுதியாகக் கூறுவதற்கில்லை. ஒவ்வொரு கட்சியும் போதிய பத்திரிகை உதவியோடு தேசியஉணர்ச்சியை யுண்டாக்கக் கூடுமா ? என்பது சந்தேகமே. இதுபற்றி எவ்விதமுடிவான அபிப்பிராயத்தையும் கூறமுடியாத நிலைமையில் நாம்இருக்கிறோம்.

#### சீர்திருத்தங்களைப் பழிப்போர்

இச் சீர்திருத்தங்களைப் பழிக்கக் கூடியவரும் சிலர் இருக்கிறார். அப்படிப் பழிப்போரை நோக்கி அவர் இஷ்டப்படுகிற ஒரு புதிய அரசியலைப்பற்றிக் கூறக் கேட்டால் அவர் கூற முடியாதவராக இருக்கிறார். காங்கரஸ் எப்படிப்பட்ட அரசியலைவிரும்புகிறது. முன்னர்க் கூறியபடி காங்கரஸ்விரும்புவதும் பார்லிமெண்டரி ஜனநாயக அரசாங்கமே. ஊன்றிக்கவனிப்போர்க்கு இப்புதிய சீர்திருத்தத்தில்பார்லிமெண்டரிஜனநாயக ஆட்சி உறைந்து கிடப்பது விளங்காமற் போகாது. இச் சீர்திருத்தங்களை ஏற்றுத் திறம்படநடத்துவோமாயின் ஜனநாயக அரசாங்கம் நம் நாட்டில் நிலைபெறுமென்பதில் சந்தேகமில்லை. ஒற்றுமையும் ஒத்துழைப்பும் இப்புதிய சீர்திருத்தத்தில் பூரண ஜனநாயக ஆட்சியையும், ஒத்துழையாமை பெரிய கலக்கத்தையும் காட்டுவன.

#### மாற்றத்தின் அபாயம்

தேச அரசியல் மாறும்போது சில அபாயங்கள் நேருதல் உலக இயற்கை. இம்மாதிரியான அபாயங்களைப் பிரான்ஸ், இதாலி முதலிய ஐரோப்பிய நாடுகளில் நாம் பார்த்திருக்கிறோம். புதிய அரசியலைப் பூரண நம்பிக்கையோடு நாம் ஏற்று நடத்துவோமாயின் அதில் அநேக நன்மைகளை நாம் பெறுதல் கூடும்.

—"ஹிந்து"





## போட்டிப் பரிசால் மாண்டான்

அம்மைய நாயக்கனூருக் கருகிலுள்ள பள்ளப்பட்டியில் சுமார் 45 வயதான இராமச்சந்திர ஆசாரி யென்று ஒருவரிருந்தார். அவருக்குப் பத்திரிகையில் வரும் போட்டிப்பரிசில் மோகம் விழுந்தது. தம் மனைவி நகைகளை விற்றுத் தொண்ணூற்றொன்பது ரூபாய் போட்டிப் பரிசுக்கட்டணம் செலுத்தினர். இரவு முப்பதினாயிரம் ரூபாய் பரிசு விழ்ந்ததாகவும், அதை இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டியதாகவும் கனவுகண்டு பிதற்றினர். அதே பிரமையால் அவர் இறந்தார்.

## ஹிட்லரை முத்தமிட்ட பெண்

பெர்லினில் ஒலிம்பிக் விளையாட்டில் நீச்சுப் போட்டி நடைபெற்றபொழுது ஹிட்லர் அதைப்பார்த்துக் கொண்டிருந்தார். ஒலிம்பிக் விளையாட்டைப் பார்க்க வந்திருந்த கூட்டத்தைக் கூறல் வேண்டுமா ? அச்சமயம் ஒரு நார்வே தேசத்துப் பெண்மணி ஹிட்லரிடம் அவர் கையெழுத்தைப் பெறச் சென்றார். சென்றவர் திடீரென ஹிட்லரைக் கட்டி முத்தமிட்டாள். ஹிட்லர் தமது முகத்தைத் திருப்பிக் கொள்ள முயன்றும் பயன்படவில்லை. அப்பெண்மணி தம்காரியத்தில் வெற்றி பெற்றார்.

## ஜவஹர் அலுவல்

சென்ற வாரம் பம்பாயி லிருக்கையில் பண்டிதர் 'ராக்ஸி ஸினிமா'வுக்குச் சென்றார். பம்பாய் காட்சிச் சாலையார் தயாரித்த 'அச்சுதகன்யா' என்ற படம் காட்டப்பட்டது. அதில் அச்சுத கன்யாவாக நடிப்பவர் ஸ்ரீமதி தேவிகா ராணி, புகைப்படம் காட்டப்பட்ட போது அந்த அம்மையார் அங்கு இருந்தார். நேருவைக் கண்டதும் அவர் ஓடிவந்து மாலையிட வந்தார். நேரு அவரை முதலில் தடுத்தார்; தம் கழுத்திலிருந்த மாலை யொன்றை அவர் கழுத்தில் சூடிய பின் அவர் கொண்டு வந்த மாலையைப் புன்சிரிப்போடு சூடிக் கொண்டார். மக்கள் பெருத்த ஆரவாரம் செய்தார்கள்.

அக்காட்சிச் சாலையார் அன்றைய வருமானத்தை ஹரிஜன முன்னேற்ற நிதியில் சேர்த்துக்கொள்ள மகாத்மாவுக்கு அனுப்புவதாகக் கூறியுள்ளார்.

சென்ற வாரம் பண்டித ஜவஹர்லால் நேரு லக்ஷ்மணபுரியில் தேர்தல் பிரசாரத்தை ஆரம்பித்து வைத்தார். மக்கள் காங்கரஸை ஆதரித்தல் வேண்டுமென்றும், அதனாலேயே நாட்டில் தாண்டவமாடும் வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் முதலிய குறைகளைப் போக்குதல் கூடுமென்றும் அவர் கூறினார். காங்கரஸின் தியாகத்தையும் பெருமையையும், அது சட்டசபை, ஸ்தல ஸ்தாபனங்கள் முதலியவற்றைக் கைப்பற்றத் தீர்மானித் துள்ள தன் கருத்தையும் அவர் விளக்கினார். மந்திரிமார் விவசாயிகளுக்கு ஒன்றும் நலம் செய்யாது ஓட்டுக் கேட்க மாத்திரம் வருவது வெட்கமான செய்கை யென்று அவர் குறிப்பிட்டார்.

சென்ற ஞாயிற்றுக்கிழமை பண்டித ஜவஹர்லால் நேரு கான்பூரில் நாற்பதாயிரம் மக்கள் கொண்ட கூட்டத்தில் பேசினார். அவர் கூறியதின் சாரம் வருமாறு:—

"இங்குக் கூடியுள்ள மக்களின் உற்சாகம் சிறந்ததாகவே தன்று. அவ்விதமிருப்பின் நாம் இன்னும் அடிமைகளாக விருக்கமாட்டோம். ............சட்டசபை செல்வதால் ஸ்வராஜ்யம் கிடைத்து விடாது. அரசாங்கத்தாரின் அடக்கு முறைக்கு ஒத்துப்பாடும் பிற்போக்காளர்களுக்கு அங்கு இடமளியாதிருக்கவே காங்கரஸ் சட்டசபையைக் கைப்பற்றத் தீர்மானித்துளது............ காக்காளர்களுக்குப் பணம் கொடுத்து ஓட்டுப்பெறுவது காங்கிரஸுக்கே துரோகம் செய்வதாகும். காங்கரஸ் மகா சபைத்தலைவன் என்ற முறையில் நான் உலகிலுள்ள எவர்க்கும் தலைவணங்கேன். ஆனால் எனது சொந்த முறையில் என் தேசத்தார் முன்பு நான் எப்பொழுதும் தலைவணங்கச் சித்தமாயிருக்கிறேன்."

திங்கட்கிழமை யன்று பண்டிதர் சிரத்தானந்தர் நந்தவனத்தில் தேசியக் கொடியைப் பறக்கவிட்டார். ஏராளமான மாணவர்கள் கூடியிருந்தார்கள். மாணவரின் சார்பாக ஓர் உபசாரப் பத்திரமும், 421 ரூபாய் கொண்ட பண முடிப்பொன்றும் ஸ்ரீ. நேருவுக்கு அளிக்கப்பட்டன. உபசாரப் பத்திரத்துக்குப் பதிலளிக்கையில் மாணவர்கள் தங்கள் நாட்டைப் பிடிக்கும் பிரச்னைகளைத் தெளிவாக உணரல் வேண்டுமென்றும், சுதந்திரப் போராட்டத்தில் மாணவர்கள் தீவிரமாகக் கலந்து கொள்ளவில்லை யென்றும், ஜவஹர் குறிப்பிட்டார். மாணவர்க்குத் தைரியம் அவசியமென்று அவர் கூறினார்.

கான்பூர் நகரசபை பண்டிதருக்கு ஓர் உபசாரப் பத்திரம் படித்து வெள்ளித் தட்டில் கொடுத்தது. ஜவஹர் நகரசபை உபசாரத்துக்குப் பதிலளிக்கையில் சாணக்கியன் காலத்திய நகர சபை நிர்வாக அமைப்பையும், தமிழ் நாட்டுப் பஞ்சாயத்து முறையையும் எடுத்துக் கூறினார்.

# ஜகத் சோதனை

## கொசுக்கடியால் மரணம்

### தற்கொலை உடன்படிக்கை

### இறந்த பிள்ளை யாருடையது?

(வனசரன்)

ஹனுமன் :—வனசரா! இன்று என் நேரம் தாழ்ந்து வந்தாய்; இனி இவ்வாறு வராதே. நான் இன்று அநேக விஷயங்களை உனக்குக் கூற இருக்கிறேன். மிக்க கவனத்தோடு கேள். இவ்வாரம் பாலஸ்தினத்துக்கு முதலில் சென்றேன். அங்குக் கலகங்கள் முடிவடையக் கூடுமென்று எதிர்பார்க்கப்பட்டதாம். ஜெருசலத்திலுள்ள முபூப்டி வீட்டில் ஐம்பது பேர் அடங்கிய ஒரு கூட்டம் நடை பெற்றதாம். இக்கூட்டத்தில் அராபிய உயர்தரக் கமிட்டியைச்சேர்ந்த சிலரும் சேர்ந்திருந்தனர். கூட்டத்திலிருந்த எல்லாரும் ஒரு மனப்பட்டு ஈராக் நாட்டின் அந்நிய நாட்டு மந்திரியாகிய நூரி பாஷாவுக்கு ஒரு தந்தி அனுப்பினர். சமாதானப் பேச்சுகளில் கலந்து கொள்ள அவர் அழைக்கப்பட்டிருந்தார்.

வனசரன் :—பாலஸ்தினக் கலகம் அடங்கி விட்டது. பிரிட்டிஷாரின் கவலை ஒழிந்தது. எகிப்து பாலஸ்தினம் முதலிய இடங்களைப் பற்றி அவர்கள் இனிக் கவலைப்பட வேண்டுவதில்லை. இந்தியாவே அடிக்கடி அவர்களுடைய கவனத்தை ஈர்த்துக் கொண்டிருக்கும்.

ஹனு :—முடிப்பதற்குள் ஆகாயக் கோட்டை கட்ட ஆரம்பித்து விட்டாயே. சமாதானப்பேச்சு முற்றுப்பெறவில்லை. ஈராக் அந்நியநாட்டு மந்திரி இன்னும் வந்து சேரவில்லை. அதனால் கலகமும் அடங்கவில்லை. ஜெருசலத்துக்கும் காப்பாவுக்கும் இடையில் இரண்டு மலைவாசிகள் துன்புறுத்தப் பட்டார்கள். இவ்விஷயம் தெரிந்ததும் ஒரு போலீஸ் லாரி வந்தது. கலகக்காரர் ஓடிவிட்டனர். பிறகு அபிசீனியா சென்றேன்.

அபிசீனியா

வன :—அபிசீனியாவில் இதாலியர் மிகக் கஷ்டப்படுகிறார் என்று கூறப்படுகிறதே; அது உண்மைதானா.

ஹனு :—அவர்களுடைய கஷ்டங்களைத் தாங்களே ஒப்புக்கொண்டு பத்திரிகைகளில் வெளியிட்டிருப்பதை நீ படித்திருப்பாய்.

வன:— நான் படியாமல் இல்லை. அவைகளைப் படித்தே இருக்கிறேன். ஆயினும் நேரில் கண்ட நீங்கள் உள்ளதை உள்ளவாறே கூறுதல் கூடுமே என்று நினைக்கிறேன் அபிசீனியாவில் இத்தாலியரால் தம் ஆதிக்கத்தைச் செலுத்தக் கூடவில்லை. அவர்கள் எதிர்பார்த்தபடி அவ்வளவு சந்தோஷத்தை அவர்களுக்கு அபிசீனியா அளிப்பதாக இல்லை. அபிசீனிய சுவஸ்ராய், ஏற்பட்டுள்ள கடுமையான நிலைமையைப் பற்றி மற்றக்கவர்னர்களுடன் யோசனை செய்து கொண்டிருக்கிறார். ஷோவான் தலைவர்கள் இதாலியரைத் தாக்கிய வண்ணமாகவே யிருக்கிறார்கள். ராஸ்காஸிபு, ராஸ் காஸா முதலியவர் மிகுந்த வீராவேசத்தோடு போர் புரிந்து வருகின்றனர். சில இதாலியர் அபிசீனியாவை விட்டுத் திரும்பலாமென்று யோசிப்பதாகவும் தெரிகிறது. இதாலியர் விஷவெடி முதலிய யுத்த ஆயுதப் படைகளில் பலமடைந்தவரே. இருந்தும் யாதுபயன்? அவர்களுக்கு இருவித விரோதிகள் இருக்கின்றார்கள். ஒரு பக்கம் அபிசீனியர்; மறுபக்கம் இயற்கை. பலமான மழைகள் பெய்கின்றன. பலத்த மழையில் விஷவெடிகள் பயன்படா. இவ்வித அபாய நிலையில் இதாலியர் அபிசீனியாவில் அல்லல்படுகின்றனர்.

33,000 மைல் சைகில் பிரயாணம்

ஹனு:—இவ்வாரம் தென் ஆப்பிரிக்காவுக்குச் சென்றேன். பியேட்டர் மாரிட்ஸ்பர்க் நகரத்தில், இந்தியாவிலிருந்து சைகிலிலேயே உலகயாத்திரை செய்யும் மூன்று வாலிபர்களைக் கண்டேன். அவர்கள் 1933-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 30-ம் தேதி பம்பாயை விட்டுப் புறப்பட்டார்கள்; இது வரை சுமார் 33 ஆயிரம் மைல் பிரயாணம் செய்திருக்கிறார்கள்.

வன:—இது வரை ஐரோப்பியரே உலக சைகில் யாத்திரை செய்வதாகப் படித்திருக்கிறேன். முப்பத்து மூன்றாயிரம் மைல் சைகில் பிரயாணம் செய்தல் வெகுசுலபமான காரியமா? இந்தியர் ஐரோப்பியருக்குச் சிறிதளவும் குறைந்தவர்களல்லர் என்பதைக் காட்டவில்லையா?

ஹனு :—நம்முடைய வீரத்தை இன்று நாம் உலகத்துக்குக் காட்டுதல் வேண்டும். வெளிநாட்டார் இந்தியரின் வீரத்தையும் திறமையையும் அறியாமலா இருக்கிறார்? பிறகு நான் இங்கிலாந்து சென்றேன்.

நியூட்டனால் மதிப்படைந்த ஆப்பிள்

லண்டன் மேயர் கனடாவுக்குப் போனதை நான் கண்டேன். போனதில் என்ன அதிசய மிருக்கிறதெனப் பதறிக் கேட்டு விடாதே. நான் கூறுவதைக் கவனமாகக் கேள். அவர் போகும்போது ஆப்பிள் மரத் தழையைத் தம்முடன் எடுத்துச் சென்றார். ஸர் ஐஸக் நியூட்டனைப் பற்றி நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? பூமியின் ஆகர்ஷண சக்தியை அவர் கண்டுபிடிக்கக் காரணமாக இருந்தது ஓர் ஆப்பிள்பழமாம். இதுபற்றிச் சிலர் சந்தேகப்படுகின்றனர்; சிலர் ஆப்பிள் பழமேயென்றே உறுதிப்படுத்துகின்றனர். எப்படியாயினுமாகுக? பிரிட்டிஷார் தம் நாட்டுப் பெரியார்களிடத்துள்ள மதிப்பைப் பார்.

வன:—இம்மதிப்பைக் கண்டா தாங்கள் புகழ்ந்துபேச ஆரம்பித்து விட்டீர்கள்? நம் நாட்டில் அவர் போன்ற பெரியோர் இல்லையா. வட்டமேஜை மகாநாட்டுக்குச் சென்றபோது பண்டித மாளவியா இந்திய மண்ணையும், கங்கா ஜலத்தையும் சுமைக்குக் கொண்டு செல்ல வில்லையா? இது எதைக் காட்டுகிறது? இந்திய நாட்டினிடத்தும், அந்நாட்டுப் பொருள்களிடத்தும் அவருக்கு உள்ள மதிப்பை அது விளக்கவில்லையா? அநேக இந்தியர் நம் நாட்டை அறவே மறந்து அந்நியநாட்டிடத்து மோகம் கொண்டிருந்த போதிலும் இவ்வாறான பெரியார் இருப்பதுபற்றி நாம் சந்தோஷப்படவேண்டியவராக இருக்கிறோம்.

கொசுக்கடியால் மரணம்

ஹனு:—இங்கிலாந்தில் இன்னொரு அதிசயத்தை நான் கண்டேன். லண்டனில் லீஸ்டர் என்பது ஒரு பாகம். அங்கு மிஸ் எத்தல் ஹென்ரிட்டா வில்காக்ஸ் என்ற ஒரு மாது சைகிலில் போய்க் கொண்டிருந்தார். திடீரென அவர் உதட்டில் ஒரு கொசு கடித்ததாம். அக்கொசுக் கடியாலேயே அம்மாது இறந்தாராம். அவருக்கு வயது இருபத்தேழு. இங்கிலாந்திலிருந்து சீனதேசத்துக்குச் சென்றேன்.

தற்கொலை உடன் படிக்கை

நம் இந்திய நாட்டைப் போல ஒரு பெரிய தேசம் சீனம். அங்கும் மூடப் பழக்க வழக்கங்கள் உள்ளன. பெண்கள் தங்களுக்கேற்ற புருஷர்களைத் தேடுதல் கஷ்டமாயிருக்கிறது. இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர்ப் பதினொரு பெண்கள் தங்கள் புருஷர் தங்கள் இஷ்டம்போல் இல்லாதவராகக் கண்டார். அதனால் அவர்கள் பதினொருபேர்களும் ஒரு ஆற்றில் வீழ்ந்து மாண்டார்கள். தற்போது பத்தொன்பது பெண்கள் ஒரு தற்கொலை உடன் படிக்கை செய்து கொண்டார்களாம். அவர் தம் பெற்றோர் அவருக்கேற்ற கணவரைத் தேடாததே இதற்குக் காரணமெனக் கூறப்படுகிறது. இப்பத்தொன்பது பேரும் முன்னதாகவே ஒரு புகைப் படம் பிடித்துக் கொண்டனர்; பாடாணத்தை யுண்டனர். அதன் பயனாக உணர்வற்று வீழ்ந்தனர். பெற்றோர் உடனே இவர்களை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றனர். அங்குத் தக்க மருந்துக்கள் கொடுக்கப்பட்டன. விஷமருந்தியவர் மீண்டும் உணர்ச்சி பெற்றனர்.

வன:—இப்படிப்பட்ட பெண்களின் கண்ணீரே நம்நாட்டையும், சீனநாட்டையும் அடிமைக் குழியில் ஆழ்த்தியிருக்கின்றது.

இறந்த பிள்ளை யாருடையது?

ஹனு:—சீன நாட்டினின்றும் நம் நாட்டுக்குத் திரும்பிவந்தேன். வட இந்தியாவில் நாஜினு நகரத்து சப்டிவிஷனல் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் ஒரு வழக்கு நடந்தது. அது பற்றிக்கேட்க நீ மிக ஆவலுள்ளவனாக இருப்பாய். நிஜ்னோர் கிராமத்தில் ஒரு பையன் பாம்பு கடித்து இறந்தானாம். உறவின் முறையார் அவனை அடக்கம் செய்து விட்டனர். சில பாம்புப்பிடாரர் புதைத்த பிணத்தைத் தோண்டி அவனை உயிர்ப்பித்தனர். இப்போது அச்சிறுவன் யாருக்குச் சொந்தமானவன் என்பது பற்றிக் கோர்ட்டில் வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. உறவின் முறையார் தமக்கென்கிறார்; பாம்புப் பிடாரர் உயிர்ப்பித்ததால் தம்முடையவனென்கிறார்.

மாஜிஸ்திரேட் இந்தியன் பினல் கோட் 368-வது செக்ஷன்படி பாம்புப் பிடாரரைத் தண்டித்திருக்கிறார்.

வன:— உயிர்போகா முன்னமேயே உறவினர் தகனஞ் செய்திருப்பர். விஷந்தீண்டி இறந்தவர்களைப் பெரியோர் எழுப்பினமையை நம் இளைஞரில் சிலர் நம்புகிறாரில்லையே. இனியாயினும் அவ்வாறு கூறுது நம்புவாரா?

ஹனு:—அவர்களுக் கெல்லாம் நற்போதனைகளைத் தரவே நான் இம்மாதிரியான விஷயங்களைக் கூறுகிறேன். எனக்கு நேரமாய் விட்டது. போய் வருகிறேன்.

வன:—நல்லது; வந்தனம்.

## மத மாற்றம்

ஜனுப் அப்துல்லா காந்தி கேரள தேசத்தில் சுற்றுப்பிரயாணம் செய்கிறார். கொச்சியில் அவருக்கு ஓர் உபசாரம் அளிக்கப்பட்டது. இஸ்லாம் மதத்தின் பெருமையே தம்மனத்தைக் கவர்ந்ததென்று அவர் குறிப்பிட்டார். கொச்சியில் சுமார் 33 பேர் முஸ்லிமாயினர். இவர்களுள் ஒருவர் ஆங்கிலோ இந்தியர்; ஒருவர் கிறிஸ்தவர்.

## மகாத்மா காந்தி

### உடல் நலமில்லை

மகாத்மா காந்தி இப்பொழுது வார்தா ஆஸ்பத்திரியிலிருக்கிறார். அடிகளுக்கு உடல் நலமில்லை. அவர் மலேரியாவால் பீடிக்கப்பட்டிருக்கிறார். சுரம் 105 டிகிரி.

இவ்வாரம் இராமனுதபுரம் தாலுகா அரசியல் மகாநாடு ஸ்ரீ. மட்டப்பாறை வேங்கட்டராமஅய்யர் தலைமையில் திருப்புல்லாணியில் கூடியது. காந்தி இர்வின் ஒப்பந்தப்படி அக் கிராமவாசிகள் உப்பெடுக்க அனுமதிக்குமாறு அரசாங்கத்தை வேண்டுவதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.



# திருடரில்லாத் தேசம்

## பூட்டில்லாக் கதவுகள்!

### சுருங்கிய செலவில் வாழ்க்கை

### பணிவும், அன்பும், சுறுசுறுப்புமுடைய மனிதர்

(திரு. ஏ. எஸ். ஆர். சாரி)

ஜப்பான் நாட்டிற்குப் பலர் செல்கிறார். இவர்களுள் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பதின்மர் அந்நாட்டைப் புகழ்ந்து கூறுவோராயும், அந்நாட்டுடன் நேசங் கொண்டுள்ளவராயுமிருக்கிறார். இது மிகைப்படுத்திக் கூறும் வார்த்தையல்ல, தங்கள் நாட்டிற்கு வருவோரின் மனதைக்கவர்ந்து, தங்களுக்குச் சாதகமாக அவரைத்திருத்தக்கூடிய அபூர்வசக்தி ஏதாவதொன்று அந்நாட்டவர்களிடமிருத்தல்வேண்டும்.

ஆடம்பரமற்றவர்

இந்தியாவுக்கும் ஜப்பானுக்குமிநெருங்கிய சம்பந்தம் ஏற்படல் அவசியம். ஜப்பானின் அறிவு அபிவிருத்திக்குக் காரணம் புத்தர் பெருமானின் உபதேச மொழியே. அத்தகைய மகான் பிறந்த இந்திய நாட்டிடத்து ஜப்பானியருக்கு மதிப்பு அதிகம். ஜப்பானியர் யாவரும் அடக்கமுடையவர்; உண்மையாளர்; ஆடம்பரமற்றவர்; கைத்தொழிலில் கருத்துக் கொள்வோர். அவர்களது மதம் அன்பைப் போதிக்கிறது.

சாட்டைக்குப் பஞ்சம்

அந்நாட்டில், கசை அல்லது சாட்டை என்று கூறப்படும் குதிரை யோட்டும் சவுக்கைப் பார்த்தல் இயலாது. கடைகளில் சாட்டையை வாங்கவும் முடியாது. ஏனெனில் அது விற்பனைக்குக் கொண்டு வரப்படுவதில்லை. வண்டியோட்டுபவர் அந் நாட்டில் சாட்டையை உபயோகிப்பதேயில்லை. அவர்கள் மிருகங்களை மிக அன்புடன் வளர்க்கிறார்கள்; அவற்றுடன் பேசிக் கொஞ்சி விளையாடுகிறார்கள். நிலங்களை உழுவதற்கும், வண்டியிழுப்பதற்குமே அங்கு மிருகங்கள் வளர்க்கப் படுகின்றன. துரிதப்பிரயாணத்திற்கு மோட்டார் உபயோகிக்கப்படுகிறது. அங்குள்ள வண்டிகளுக்கு நான்கு சக்கரங்களிருக்கின்றன. அவ்வண்டிகளில் மாட்டுக்குத் தீனிப்பொருள்கள் வைக்கப்பட்ட பாத்திரம் ஒன்றிருக்கிறது. நம் நாட்டில் காணப்படுவதுபோல இளைத்துநாலும்புந்தோலுமாயுள்ள குதிரைகளையோ, மாடுகளையோ அந்நாட்டில் காணல் அரிது. அஹிம்சா தர்மமும், அன்பே மதம் என்ற கொள்கையும் நமது நாட்டிலிருந்தே அங்கு சென்றிருத்தல் கூடுமென்று நான் நினைக்கிறேன்.

பிராணி வாரம்

ஒரு நாள் மழை பெய்தது. ஒரு வண்டிக்காரன் 'மழைக்கோட்' ஒன்று மேலே தரித்திருந்தான்; அதைச் 'சடக்'கென்று எடுத்துத் தன் குதிரைக்குப் போர்த்துவிட்டுத் தான் மழையில் நனைந்தான். அவன் தன்னுடைய குதிரையிடத்துக் கொண்டுள்ள அன்பை என்னென்று கூறுவது! ஒவ்வொரு வருஷமும் 'பிராணி வாரம்' என்று ஒரு வாரக் கொண்டாட்டம் ஜப்பானில் நடைபெறுகிறது. சிறியவரும், பெரியவரும், பிராணிகளிடத்து அன்பா யிருத்தல் வேண்டுமென்று அந்நாட்களில் போதிக்கப்படுகிறது. இந்தியாவில் இம்முறை பின்பற்றப்பட வேண்டுவது அவசியம். 1868-ம் வருஷம் வரை ஜப்பானியர் மாமிசத்தைப் புசியா திருந்தனர். இப்பொழுதும் ஒரு சிலரே மாமிசம் உண்கிறார்.

குணத்திலும் இயற்கையிலும் ஜப்பானியர் உலகிலுள்ள எந்த நாட்டவரையும்விட மிகவும் அடக்கமுள்ளவர்.

மரியாதையான வரவேற்பு

இரயிலில் பிரயாணம் செய்யும்பொழுதும், பஸ்ஸில் செல்லும்பொழுதும், கூட்டம் அதிகமாயுள்ள பொழுதும், வருவோருக்கு இடமளியாமல் மக்கள் வாளாவிருப்பதையும், தூங்குவதையும், சச்சரவிடுவதையும் நம் நாட்டில் கண்கூடாகக் காண்கிறோம். ஜப்பானில் அவ்விதம் காணல் இயலாது. எங்கு சென்றாலும் மரியாதையான வரவேற்பளிக்கப் படுகிறது.

கடைகளில் உபசாரம்

நமது நாட்டிலே கடைகளுக்குள்ளே சென்று பல சாமான்களைப் புரட்டிப் பார்க்கவே கடைக்காரர்கள் அனுமதிக்க மாட்டார்கள். மேலும், ஒரு சாமானும் வாங்காமல் வெளியே வந்தால் கேட்க வேண்டுமா? கடைக்காரர் நமக்களிக்கும் வெகுமதி கொஞ்சமல்ல! ஆனால் ஜப்பானில் அப்படியல்ல. ஒரு கடைக்குள் செல்வதற்குமுன் மலர்ந்தமுகத்துடன் அந்தக்கடைக்காரர் நம்மை எதிர்கொண்டழைக்கிறார். வெகுநேரம் ஒவ்வொன்றையும் பார்த்தபின், ஒன்றும் வாங்காமல் கடையைவிட்டு வெளியே சென்றால் அவர்கள் நம்மை ஒன்றும் சொல்கிறார்களில்லை. அவர்களது கடையையே நாம் வாங்கி விட்டதுபோல மலர்ந்த முகத்துடன் அவர்கள் நமக்கு வந்தனமளிக்கிறார்கள். கடைகளில் 'பேரம்' என்பதே அங்கு இல்லை. ஒரு பொருளுக்குக் குறித்தவிலையே எல்லாக் கடைகளிலும் கூறப்படும். வெளிநாட்டவர் என்ற காரணத்தால் ஏமாற்றும் வழக்கம் ஜப்பானியரிடம் இல்லை. எங்குச் சென்றாலும் சரி; டிராமிலாகட்டும்; ரயிலிலாகட்டும்; சிற்றுண்டிச்சாலைகளிலாகட்டும்; எங்கும் அதே உபசாரம்; வரவேற்பு அளிக்கப் படுகிறது. இங்கிலீஷ் தெரியாத ஜப்பானியரிடத்து நமது விருப்பத்தைத் தெரிவிக்க முடியாததே குறை.

மகளிரே காரணர்

ஜப்பானியர் சமாதானத்தையே விரும்புகிறார். ஜப்பானில் குற்றம் செய்வோர் தொகை சுருக்கம். அதாவது ஒழுக்கக் குறைவான குற்றங்களை அந்நாட்டவர் செய்தல் அருமை. ஆண்களைவிடப் பெண்களிடத்திலேயே அதிக கௌரவப் பொறுப்பு எதிர்பார்க்கப்படுகிறது. ஜப்பானின் அபிவிருத்திக்கு அந்நாட்டு மகளிரே காரணர்.

திருடில்லை!

ஜப்பானில் பெரும்பான்மையான வீடுகள் கண்ணாடியாலும் காகிதச் சுவர்களாலுமே கட்டப்பட்டவை. அந்த வீடுகளுக்குப் பூட்டேகிடையாது. வெறு இரும்புச் சாமான்களையே அங்குக் காணல் அருமை. இருந்தும் கொள்ளையும், திருடும் அங்கு அதிகமில்லை. டோகியோவில் நாங்கள் இறங்கியிருந்த இல்லத்தை எல்லாப் பொருள்களுடனும் திறந்து போட்டபடியே விடுத்து நாங்கள் சென்றோம். பல நாட்கழித்துத் திரும்பி வந்து பார்த்தால் எல்லாம் வைத்தபடியே யிருந்தன. ஒரு பொருள் கூடக் காணாமற் போகவில்லை! நம் நாட்டில் மனிதர் அயர்ந்து மறந்திருந்தால் திருடர் பொருள்களைக்களவாடுகிறார். ஜப்பானில் ரயிலில் வைத்த மூட்டை, வைத்த விடத்திலேயே யிருக்கும். ரயில், டிராம், பஸ் முதலியவற்றில் டிக்கட் பரிசோதகரே கிடையாது.

சிறையின் நோக்கம்

சிறைச்சாலைகள் மிகவும் நாகரிகமான முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

குற்றவாளி தான் செய்த குற்றத்திற்காகத் தண்டனை அடைதல் வேண்டுமென்று அங்குச் சிறைச்சாலைக்கு அனுப்பப் படுவதில்லை. ஆனால் அவன் திருந்தி நல்ல பிரஜையாக ஆதல் வேண்டும் என்பதற்காகவே சிறைக்கு அனுப்பப் படுகிறான்.

டோக்யோவுக்கு அருகிலுள்ளசிறைச்சாலை யொன்றில் கைதிகளாகவே ஒரு பத்திரிகை நடத்துகிறார்கள். அதற்கு 'ஹிதோ' என்று பெயர். கைதிகளே அதில் கட்டுரை யெழுதுகிறார்கள்.

ஆபரணம் அணிவதில்லை

ஜப்பானியர் பழக்க வழக்கங்கள் யாவும் ஆடம்பரமற்றவை. மிகச் சுருங்கிய செலவில் ஜப்பானியர் தம் வாழ்க்கையை நடத்துகிறார்கள். பெரிய பணக்காரரும் அந்நாட்டில் மோட்டார்கார் வாங்குகிறாரில்லை. வாடகைக்கு'டாக்ஸி'கள் குறைந்த விகிதத்தில் அங்கு ஏராளமாகக் கிடைக்கின்றன. அவற்றையே அவர்கள் உபயோகிக்கிறார்கள். ஒருகாலன் பெட்ரோல் விலை ஆறு அணு. இக்குறைந்த விலை இந்தியரின் நாக்கில் நீரைச் சொட்டச் செய்யுமன்றோ? எவ்வளவு பெரிய பணக்காரப் பெண்மணியும் அந்நாட்டில் ஆபரணம் அணிவதில்லை. ஜப்பானியர் சாப்பிடுவதும் மிக எளிய உணவே.

முந்நூறு ரூபாயே

ஜப்பானியர்கள் உழைப்பாளிகள். கஷ்டப்பட்டு வேலை செய்வதிலேயே அவர்களுக்கு விருப்பமதிகம். அவர்களுக்கு மேற்பார்வையாளர்கள் இருப்பதில்லை.

ஜப்பானில் சுப்ரீம் கோர்ட்டு நீதிபதிக்கு முந்நூறு ரூபாயே சம்பளம், அவரது குமாஸ்தாவுக்கு நூறுரூபாய் சம்பளம்.

ஜப்பானில் எழுதப் படிக்கத் தெரியாதாரே இலர். அங்கு ஏராளமான சர்வகலாசாலைகளிருக்கின்றன. ஆரம்பப்பள்ளிக்கூடங்கள் மலிந்து கிடக்கின்றன.

ஜப்பானில் எங்கும் அசுத்தப் பொருள்களைக் காணல் அரிது. ஒவ்வோர் இடமும் ஆரோக்கியமாகவும் சுத்தமாகவும் காணப்படும். நாடெங்கும் மின்சாரவிளக்குகள் ஜொலிக்கின்றன.

—"ஹிந்து"



## திருடர் வேலை நிறுத்தம்

டமாஸ்கஸ் நகரப் போலீசாரின்மீது கொண்ட வெறுப்பால் அங்குள்ள திருடர் யாவரும் கட்டுப்பாடாக வேலை நிறுத்தம் செய்தனர். வேலை நிறுத்தம் தொடர்ந்து நான்கு வாரங்கள் நடைபெற்றன. அக்காலத்தில் திருட்டு வழக்கு ஒன்றுகூட நடைபெறவில்லை. அதனால் போலீசார் வேலையிலிருந்து தள்ளப்படலாம் என்று திருடர் நினைத்தனர். ஆனால் அவர்கள் எதிர்பார்த்தபடி நடைபெறவில்லை. அவர்களது வேலை நிறுத்தம் போலீசாரின் கவனத்தை இழுக்கவில்லை. ஆகவே திருடர் தம் வேலை நிறுத்தத்தை விட்டு மறுபடியும் தொழிலை ஆரம்பித்தனர்.

## சென்னைக் கடற்கரையின் காட்சி

(திரு. தை. ஆ. கனகசபாபதி முதலியார்)

(உரிமை ஆக்கியோர்க்கே)

ஒரு நாள் சுமார் நான்கு மணிக்கு நான் கடலின் தோற்றத்தைக் கண்டு களிக்கச் சென்றேன். வழியில் பல கட்டடங்களையும் பூந்தோட்டங்களையும் கண்டு இன்பமனத்தினனாய்ச் சென்னை இராஜதானிக் கல்லூரியின்பக்கம் யான் சென்று சேர்ந்தேன். இரயில் வண்டித் தொடர்போன்று நிறுத்தப்பட்டிருந்த மோட்டார் வண்டிகள் பல என் கண்களுக்கு விருந்தளித்தன. சில வண்டிகளில் ஐரோப்பியக் குழந்தைகளும், சில வண்டிகளில் இந்தியக் குழந்தைகளும் உட்கார்ந்து கொண்டிருந்தன. பல குழந்தைகள் வண்டியிலிருந்து குதித்திறங்கிக் கடலை நோக்கி ஓடிக்கொண்டிருந்தன. அழகிய இந்தியப் பெண்ணொருத்தி ஒரு மோட்டார் வண்டியைச் செலுத்திக்கொண்டு அவ்விடத்தில் வந்து சேர்ந்தாள். என்பக்கத்திலிருந்த இந்தியர் சிலர் "என்னே விந்தை! என்னே விந்தை!" எனச் சொல்லிக்கொண்டே நின்றனர்.

### கிழவியின் அழுகை

நான் சிறிது திரும்பினேன். ஒரு கிழவி என்பக்கத்தில் வந்து, "ஐயா, உன்வாய்க்கு வெற்றிலை, எனக்கு ஒரு வேளைச் சாப்பாடு—காலணாக் கொடு—ஐயா" என்று கேட்போர் மனம் உருகும் வண்ணம் கேட்டாள். என்னிடத்துச் சில்லறையாகப் பணம் இல்லை. அதனால் ரூபாய்க்குச் சில்லறை கொடுக்கக் கூடியவர் யாராவது வருகின்றாரா எனப் பின்பக்கம் திரும்பினேன்; கண்டேன் ஓர் அழகனை! அவன் என் குறிப்பைஅறியாது "ஐயா, இக்கிழவியின் மடியில் இருக்கும் பணம்இவளுக்குப் பத்துநாட்களுக்கு உணவளிக்கும்; இவளுக்குப் பணத்தின் மீது வெகு ஆசை பிறந்து விட்டது!" என்று சொல்லிக்கொண்டே கிழவியை உற்று நோக்கினான். பயத்தின் வயப்பட்ட கிழவி எங்களைவிட்டு நீங்கினாள். அவ்வழகன் என்னை ஆலோசனையில் ஆழச் செய்தான்; கொடுப்பாரைத் தடுப்பார் பெறும் பயனை அவன் பெற்றிருப்பான்!

### கடலை விற்போன்

ஒருவன் கடலை விற்றுக்கொண்டு என் எதிரில் வந்தான். அவனை அவ்வழகன், "என்ன ஐயா, விற்கின்றாய்?" எனக் கேட்டான். அதற்கு அந்த வியாபாரி, "கடலை விற்கின்றேன்," என்று பதிலளித்தான். உடனே அழகன், "கடலை நின்கூடை கொள்ளுமா?" என்றான். அந்த வியாபாரி தன் கூடைமீதிருந்த துணியை எடுத்தான். கடுகடுத்த முகத்தோடு அவ்வழகன், "ஐயா, நீ பெரிய மோசக்காரன்; கடலை விற்பதாய்க் கூறி இத் தானியத்தைக் காட்டுகின்றாய். உன்னை நான் காவல் அதிகாரிகளிடம் சேர்க்கின்றேன்; பார்!" எனக் கூறினான். அதனைக் கேட்டதும் அந்த வியாபாரி ஒரு புறம் பயமும், ஒரு புறம் கோபமும், ஒருபுறம் திகைப்பும் உடையவனாய் நின்றான். அவ்வழகன் அவனை வருத்துவதைக் கண்டு நான் பெரிதும் வருந்திய மனத்தோடு அவ்விடம் விட்டு அகன்றேன். தம் இன்பங்கருதிப் பிறரை வருத்தும் மாந்தர் இவ்வுலகில் எண்ணிலர். அந்தோ! இவரும் மாந்தரோ!

### ஓர் அழகிய சிறுவன்

ஒருபக்கம் பலர்கூட்டமாய் உட்கார்ந்திருந்தனர். அங்கு நான் சென்றேன். அக்கூட்டத்தின் மத்தியில் நீண்ட அங்கியைத் தரித்த ஒருவன், "பெரியீர், கடவுள் ஒருவரே உண்டு. அவர்க்கு ஜாதி மதம் இன்ன பிற இல்லை. இயற்கையே அவர் உடல். உயிர்களிடம் அன்பு பூண்டு ஒழுகுபவரே அவர்க்குப் பெருந்தொண்டு செய்பவராவர்," என இறைவனைப் பற்றியும் மக்களைப் பற்றியும் விரிவாக உரைத்துக் கொண்டிருந்தான். அவ்வுரைகளைக் கேட்டுக் கொண்டிருந்த என்னை ஒரு சிறுவன் செயல் கவர்ந்தது. அச்சிறுவனுக்குச் சுமார் மூன்று வயதிருக்கும். அவன் தன் பக்கத்தில் அமர்ந்திருந்த தன் தந்தையின் கைகள்மீது மணலை அள்ளி அள்ளி இறைத்துக் கொண்டிருந்தான். திடீரென்று அவன் தன் இருகைகளாலும் மணலை அள்ளித் தன் தந்தைமீது வீசி எறிந்தான். அம்மணற் பொடிகள் அப்பெரியோன் முகம் தலை முதலிய உறுப்புக்கள்மீது தவழ்ந்தன. அவன் கோபமுற்று, "அடே! பயலே, கண்களிலா மணலைக் கொட்டினாய்!" என்று சொல்லிக்கொண்டே அச்சிறுவனைத் தண்டிக்கும் குறிப்போடு எழுந்தான். உடனே அச்சிறுவன் சுமார் பத்தடி ஓடிச்சிறிது குனிந்து,தன் இருகாங்களையும் தட்டிக் கொண்டு சிரித்தான். ஆ! சுருண்டு தொங்கிய சிகையினையும், திலகமணிந்த நெற்றியினையும்,இன்பம்பொழியும் கண்ணினையும், அன்றலர்ந்த தாமரையில் முல்லைமொக்கு அமைத்தாலொத்த வாயினையும், நீலநிறம் வாய்ந்த அழகிய உடலினையும் பெற்ற அச்சிறுவனை நான் உற்று உற்று நோக்கினேன். அடிக்கச் சென்ற அவன் தந்தை அவன் நின்ற நிலையினைக்கண்டு பேரின்பமுற்று அவனைத் தூக்கித் தன் மார்போடு அணைத்துக் கொண்டான். நான் அச்சிறுவன் பால் சென்றேன். அவன் என்னைக் கண்டு சிரித்தான்; ஆனால் என்னிடம் வந்திலன். நானும் நின்று நோக்கிப் பிரிந்தேன். என்ஆயுள் நாளில் அவ்வொரு காட்சி இனிக் கிடைக்குமோ! அறியேன்.

### காதலன் முத்தம்

ஆசைமேலிட்டால் அலையும் மக்களை போன்று வானில் பருந்துகள் வட்டமிட்டுக்கொண்டிருந்தன. அங்கு ஒருபால் நின்று யான் பலபல எண்ணினேன். என் எண்ணம் முடிவுபெறும்முன்னமே இன்னிசைக்கீதம் என் செவியைக் கொண்டது. அவ்வோசை வந்தவழியே சென்று சிறிதுபொழுது இசைவயப்பட்டேன்.

பின்னர் யான் கரையோரம் சென்றேன். 'எம்பால் வருக! எம்பொருள் கொள்க!' என்று அழைப்பனபோன்று அலைகள் காட்சி வழங்கின. ஒருபால் செம்படவர்கள் மீன்களை விற்றுக் கொண்டிருந்தார்கள். அவர்தம் சிறுவர் போர்க்களம் புகுந்து போர்புரியும் வீரரே போன்று அலைகளைத்தாக்கி விளையாடிக் கொண்டிருந்தனர்.

காற்றின் பொருட்டு வந்திருந்த சிறுவர் சிறுமியர் மணலில் வீடுகட்டி விளையாடிக்கொண்டிருந்தனர். சிறுமியர் கட்டிய மணல் வீடுகளைச்சிறுவர் சிலர் அழித்து அன்னாரை வருத்தினர். அச்சிறுவர்க்குத் துணையாகவே அலைகளும் நின்றன. சூரிய கிரணத்தால் கிளிஞ்சில்கள் மின்னின. அவைகளைச் சிறுவர்கள் செல்வப்பொருளெனச் சேர்த்துக் கொண்டிருந்தார்கள்.

சிறுசிறு நண்டுகள் தம்மைப் பின்தொடர்ந்து வருகின்ற கயவரினின்றும் தப்பித்துக் கொள்ளப் பதுங்கிப் பதுங்கி ஓடும் மனிதரே போன்று வளைகளில் நுழைவதும் வெளிவருவதுமாய் இருந்தன.

தன்பிரிய காதலிக்கு முத்தமளித்து, விலகி நின்று நோக்கித் திரும்பவும் வந்து முத்தமளிக்கும் தலைவனே போன்று அலைகள் நுரையொடுவந்து கரையாம் மாதிற்கு முத்தமளித்துக் காட்சி அளித்தன.

கதிரவன் மேற்றிசை மறைந்தான். இருளென்னும் மாது உலகைக் கைக்கொள்ள முயன்றாள். அதனை உணர்ந்த சந்திரன் தண்ணொளி பரப்பும் தன் கிரணங்களோடு கடலிடைத் தோன்றினான். தென்றல் காற்றும் மெல்லென வீசிற்று. யான் என்னையும் மறந்து இயற்கைப் பொருள்களுள் ஒன்றாயினேன்.

## தேசபக்தியின் அவசியம்

### பிறப்பிடம் வீடே!

#### பள்ளிச்சிறுவரின் நிலை

[திரு. என். கே. என்பவர் 'தேசபக்தியைப் போதித்தல்' என்ற தலைப்புடன் 'ஹிந்து' பத்திரிகையில் எழுதிய கட்டுரையின் சாரம் வருமாறு.]

தான் பிரதிதினமும் கண்ணுற்காணும் தன்னுடைய வீட்டினிடத்து அன்பும், தன்னுடைய கிராமத்தினிடத்து நேயமும் கொள்ளாத ஒருவன் தான் காணாத தேசத்திடத்தும், மக்கள் கூட்டத்திடத்தும் அன்பு கொள்ளுதல் எவ்விதம் இயலும்? 'தேசபக்தி ஒருமனிதனின் வீட்டிலிருந்தே பிறக்கிறது' என்பது பேகன் வாக்கு. ஜப்பானியர் இந்த இரகசியத்தை உணர்ந்திருக்கிறார்: இயற்கையின் வனப்பைக்கண்டு களிக்குமாறு அவர்கள் தங்கள் சிறுவர்களுக்குப் போதிக்கிறார்கள். மலைக் காட்சிகளையும், நதிக் காட்சிகளையும் பார்த்து ஆனந்திக்கும்பொருட்டு அவர்கள் வெளியிடங்களுக்கு அழைத்துச் செல்லப் படுகிறார்கள்.

#### பள்ளிக்கூடங்களே சிறந்தன

தற்காலம் நம் நாட்டுக்கு மிக அவசியமானவை மூன்று. அவை ஒற்றுமை, சகோதர நேயம், தேசபக்தி என்பன. இவற்றை வளர்ப்பதற்குப் பள்ளிக் கூடங்களும், உபாத்தியாயர்களுமே சிறந்தவராவார்கள்.

பள்ளிக்கூடங்கள் எவ்விதம் தேசபக்தியைப் போதித்தல் கூடும்? தேசபக்தி, அவரவர் வசிக்கும் இடங்கள் மீது கொண்டுள்ள அன்பிலிருந்தே அரும்புகிறது.

#### நம் நாட்டுச் சிறுவர்

நமது நாட்டுச் சிறுவர்களைப் பாருங்கள்! அவர்களது சோர்வுற்ற நடையையும், ஒளிமழுங்கிய கண்களையும், பொலிவற்ற முகத்தினையும், உற்சாகமற்ற தோற்றத்தையும் நோக்குங்கள்! இயற்கையின் அழகையும், பட்சிகளின் கவலையற்ற வாழ்வையும்,புஷ்பங்களின் மனங்கவர் தன்மையையும் கண்களாற் கண்டு களியாது அவர்கள் இருக்கும் நிலையை உணருங்கள். அவர்களது தேசபக்தி வளர்க்கப் படாதிருப்பதைக் கூர்ந்து கவனியுங்கள். சமூக சேவைத் திட்டம் ஒன்று வகுக்கப் பட்டுப் பிள்ளைகளுக்குப் போதிக்கப்படல் அவசியம். அத்திட்டம் சிறிதாக இருந்தாலும் அதைப் பற்றிக் கவலை வேண்டாம். நமது நாட்டில் மக்களை வாட்டும் வறுமையையும், கல்வியறிவின்மையையும் பள்ளிச்சிறுவர் அறிதற்கு அதுவே போதும்.

தேசபக்தி, பள்ளிச் சிறுவர்களுக்கு நிதானமாகச் சிறிது சிறிதாகப்போதிக்கப்படல் நல்லது. திடீரென்று அளவுக்கு மீறிப் போதிக்கப்படும் எந்த விஷயமும் உடனே மாறான பலனையளிக்கும்.

#### தேசபக்தர் திருநாள்

உபாத்தியாயர்கள் நமது நாட்டிலுள்ள பல மாகாணங்களைப் பற்றியும் தெளிவாகப் பிள்ளைகளுக்குக் கற்பித்தல் வேண்டும். தொடர்ந்து போதிக்கப்பட்டுவரும் தேச பக்தியால் பல இடங்களில் தேசியக் கவிகளும், புலவர்களும் தோன்றி யிருக்கிறார்கள். இந்திய வீரர்களைப்பற்றிய முழு விவரங்களும் நம் நாட்டுப் பிள்ளைகளுக்குக் கற்பிக்கப்படுவது அவசியம்.

தேசபக்தர்களின் திருநாள்களைக் கொண்டாடுவதால் சிறுவர்களின் உள்ளத்தில் தேசபக்தி அரும்பும். ஒழுங்கு முறையையும், தெய்விக எண்ணங்களையும், நம்நாட்டு முறைகளில் பற்றுதலையும் அடிப்படையாகக் கொண்ட தேசபக்தியே சிறந்தது. இந்தியர் ஒரே கருத்துடையவராதல் வேண்டும்; ஒன்றுபட்ட நோக்கமுடையவராதல் வேண்டும். மாகாணத்தவரென்றும், மற்றைப் பிரிவினரென்றும் தனித்திருத்தல் கூடாது.

## உருளைக் கிழங்கின் உபயோகம்

டாக்டர் பெர்னாண்டஸ் என்பார் 'ஹெல்த்' என்ற பத்திரிகையில் பின்வருமாறு எழுதுகிறார்:—

இந்தியக் காய்கறிகளில் உருளைக் கிழங்கே நீண்ட நாள் கெடாமலிருக்கக் கூடியது. உருளைக் கிழங்கு எளிதில் கிடைக்கிறது. உருளைக் கிழங்கு நன்கு சமைக்கப்படுமானால் சீக்கிரம் ஜீர்ணித்துப் போகும். அதில் சத்துப் பொருளும் அதிகம். எல்லாரும் உருளைக் கிழங்கை உபயோகிக்கலாம். நீர் ரோக உபத்திரவம் உள்ளவருக்கு உருளைக் கிழங்கு உகந்ததல்ல. உருளைக்கிழங்கை வேக வைத்த பிறகு அந்த ஜலத்தைப் பலர் கொட்டி விடுகிறார். அது தவறு. அந்த ஜலத்திலேயே சத்துப் பொருள் இருக்கிறது.





## அதிவீரராமபாண்டியர்

(இலக்கண விளக்க ஆசிரியர் பாம்பரை - திரு. சோமசுந்தர தேசிகர்)

(தனி உரிமை யுடையது).

II

### 3. இராச்சியபாரம்

அதிவீரராம பாண்டியர் திருநெல்வேலிப் பெருமாளுடைய மூத்த மகனென்று முன்னர் கூறினோம். திருநெல்வேலிப் பெருமாளான வீரவேள் குலசேகரர் உயிரோடிருந்த போதே சகம் 1486ல் தம் மகனுக்குப் பட்டஞ் சூட்டினர். இதனைக் குறிக்கும் தென்காசி விசுவநாத சுவாமி கோயிற் சாசனம் பின்வருமாறு கூறுகிறது:—

[1]சகன்கால மாயிரத்து நானூற்றெண்
பத்தாறிற் சலதிசூழ்ந்த
செகங்காண விரத்தாக்கி சித்திரையி
லிருபதாந் தேதி வேந்தர்
புகழ்ந்தேவல் செயப்பூர்வ திதியாறில்
முதல்வாரம் புணர்பூசத்திற்
சுகந்தாதி புனையழகன் சீவலவே
ளெனமகுடஞ் சூடினனே.

இந்தப் பாட்டிற் கண்ட சகம் 1486 கி. பி. 1564 ஆகும். சாலியவாகன சகாப்தம் 1486ல் செல்லாநின்ற இரக்தாக்ஷி யாண்டு சித்திரை மாதம் 20-ம் தேதி பூர்வபட்ச சஷ்டியும் புணர்பூசமும் கூடிய ஆதிவாரத்தன்று அழகன் பெருமாளான அதிவீரராமர் சீவலவேள் என மகுடஞ் சூடினர். இந்த நாள் ஆங்கில வாண்டு 1564ஞ மேமீ இரண்டாந் தேதி யாகும்.

சீவலவேள் என்பது ஸ்ரீவல்லபவேள் என்பதன் மரூஉமொழி. இவர் கி. பி. 1568-ல் பட்ட மடைந்தாலும் இவருடைய தகப்பன் உயிரோடிருந்த எட்டு ஆண்டுகள் வரை இளவரசராகவே இருந்தார். "[8]கோஜடில வர்மரான திரிபுவன சக்கரவர்த்தி கோநேர்மை கொண்டான் திருநெல்வேலிப் பெருமாள் வீரவெண்பா மாலையான் தன்மப் பெருமாள் குலசேகர தேவர் நந்தனரான அழகம் பெருமாள் அதிவீரராமரான ஸ்ரீவல்லப தேவர்க்கு ஆண்டு மூன்றாவது குரோதன ஸம்வத்ஸரத்து உத்தராயணத்து ஹேமந்த ருதுவில் மகா ஞாயிற்று ஆறாந் தேதி பூர்வ பட்சத்துத் திரயோதசியும் பிரகஸ்பதி வாரமும் மாகேந்திர யோகமும் வராஹ கரணமும் பெற்ற மிருகசீர்ஷத்து நாள் உலகு சிந்தாமணி வளநாட்டு கிடாரத்து இராக்குதப் பெருமாள் களப்பிரான் சீவலக் காலிங்கராயனுக்கு சீபண்டாரக் கணக்கும் திருவாழியும் கண்காணியும் திருமாலையும் காணியாட்சையாகக் கற்பிக்கும்படிக்கு நம் குமாரன் அழகம் பெருமாள் அதிவீரராமனான ஸ்ரீவல்லப தேவன் நம் வாசற்காரியம் நாயினானுக்கும் தானக்கணக்கு சொக்கன் கண்டிய தேவனுக்கும் தானிகருக்கும் ஓலைவர விடுகையில..............[9] ஆசந்திரதாரம் சந்ததி பிரவேசமே செம்பிலும் சிலையிலும் வெட்டிக் கையாண்டு கொள்ளவும். ....சார்வ பௌம கோஜடில வர்மரான ............குலசேகர தேவர் நந்தனரான அழகன் பெருமாள் அதிவீரராமரான ஸ்ரீவல்லப தேவர்க்கு ஆண்டு 8-வது பிரமோதூத ஸம்வத்ஸரத்து........கர்கிரவியும் அபரபட்சத்து ஏகாதசியும் சோமவாரமும் சுபயோகமும் சிம்ம கரணமும் பெற்ற புஷ்ய நட்சத்திரத்து நாள் காச்யவ கோத்திரத்து போதாயன சூத்திரத்துத் திருமேனியழகியான் பிரமாதராயன் தண்டைக் கால பிரமாதராயனுக்குப் பண்டுடையானும் பழம் பேரையும் தவிர்த்து முப்பதுவட்டமும் நம் அர்ச்சனைக் காணியாச்சையாக கல்பித்தபடிக்கு நம்குமாரன் அழகம் பெருமாள் அதிவீரராமனான ஸ்ரீ வல்லப தேவர் ஓலை நம்வாசல்.......க்கு வர விடுகையில் நம் காரியம் ராமநாதனும்.......கணக்கின்படி விட்ட குறுமறைநாட்டு விந்தனூர் பெரியகுளத்தின் கீழ் நிலம்.......எப்பேர்ப்பட்ட சமஸ்த பிராப்திகளும் ஆசந்திரதாரவது சந்ததி பிரவேசமே செம்பிலும் [சிலையிலும்] வெட்டிக் கையாண்டு கொள்ளவும்[10]" என்பன கொண்டு இவர் இளவரசராக இருந்தார். அதன் பின்னர் இவர் தம் சுயாதிகாரம் செலுத்த ஆரம்பித்தது.[11] அடுத்த பிரஜோத்பத்தி யாண்டு வைகாசிமீ 15உக்கு முன்னரே யாகும்.

### ஆட்சிக் காலம்

இவர் உத்தேசம் நாற்பத்திரண்டாண்டு ஆண்டதாகத்தெரிகிறது. திருக்குற்றாலம் குற்றாலநாதர் ஆலயத்து மகா மண்டபம் வடபுறம் ஜகதிப்படையில், 'சகாப்தம் 1527ன் மேல் செல்லாநின்ற..............கோஜடில வர்மரான திரிபுவன சக்கரவர்த்தி கோநேரின்மை கொண்டான் ஸ்ரீ அழகண்ணனை அதிவீரராமரான ஸ்ரீவல்லபதேவர்க்கு ஆண்டு 42-வது [12]விசுவாவசு ஸம்வத்ஸரத்து என்று காணப்படுகிறது. இதற்கு மாறாகத் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள புதுக்கோட்டைச் செப்புப் பட்டயத்தில் அதிவீரராமரான சீவலவேள் இறந்து போகவே அவரது பெரியப்பன் மகனான வரதுங்கராமன் பட்டத்துக்கு வந்தான் [13]என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் வரதுங்கராமன் முடி சூடிய காலம் கலியப்தம் 4689க்கு கி. பி. 1517 ஆகும். [14]ஆதலினாலே அதிவீரராமர் அதற்குள் இறந்து பட்டார் என்று சொல்லுவதற்கில்லை. எவ்வாறாயினும் இவர் இருபதாண்டுகட்குமேல் அரசாண்டார் என்பது ஒருதலை.

இவருக்கு மற்றைய அரசர்களைப் போல பல மனைவியர் இருந்ததாகத் தெரியவில்லை. இவருக்கு அழக சொக்கனார் அபிராம பாண்டியன் என்ற பேருடைய ஓரே மகனுண்டு.[15]

இவர் சமயத்தில் சைவராயினும் பொது நோக்குடையவரென்றே சொல்லுதல் வேண்டும். பல விஷ்ணு வாலயங்களுக்கும் இவர் வேண்டிய தானங்களைச் செய்துள்ளார்.

7. தென்காசி விசுவநாத சுவாமி கோயிற் சாசனம், T. A. S. i, 106.
8. T. A. S. i, 274
9. இடம் வீணே அடைபடுமென்று கல்வெட்டு முழுமையும் எழுதவில்லை. வேண்டிய மட்டும் குறிக்கப்பட்டிருக்கிறது.
10. T. A. S. i, 277.
11. T. A. S. i, 278.
12. I. M. P. Tin.
13. சுலோகம் 19. T. A. S. I, 65
14. தென்காசி விசுவநாதசுவாமி கோயிற் சாசனம். T. A. S. I, 116
15. T. A. S. i, 280

